போன்: 4026 தந்தி: "BONTEX"

## பண்டிகை கால குதூகலத்தை ஊக்குவிப்பது புத்தாடை

## உங்களுக்காகவே பல தினுசுகளில்

சுத்தப் பட்டுச் சேலைகள்

நூல், பம்பர், ஆர்ட் பட்டுச் சேலைகள்

உல்லி-உல்லி, ஷாமூ சாட்டின் சேலைகள்

டெரிகாட்டன் சூட்டிங்,

ஷர்ட்டிங், சீட்டி, கேம்பிரிக், வாயில் ரகங்கள்

மற்றும்

மபத்லால் குரூப்,
பின்னி, மேட்டூர்,
பாம்பே டையிங், ஹார்வி,
அரவிண்ட் குரூப்,
காலிகோ, கட்டாவ்,
டாடா ஆகிய எல்லா
மில் ஜவுளிகளும்
D. C. M. மெத்தை துணிகளும்
குவாலியர் சூட்டிங்குகளும்

கிடைக்கும் இடம்

# P. R. நாராயணசாமி அய்யர்

பட்டு மில் & ஜவுளி வியாபாரம்,

**494, பெரியகடைவீதி, திருச்சிராப்பள்ளி-8.**



# *P. R.* நாராயணசாமி அய்யர் & கோ.,

**ஜவுளி வியாபாரம், கண்ணன் பஜார், காரைக்குடி-1.**

போன்: 435

• எங்கள் ஒரே விலை கொள்கை தாங்கள் போற்றத் தகுந்ததே •



பொது மக்களுக்கும், எங்களது
அபிமானிகளுக்கும்

# தீபாவளி வாழ்த்துக்கள்

* குடி தண்ணீர்
* மின் விளக்கு
* ரோடு வசதிகளுடன்

எளிய **தவணை முறையில்**



## வீட்டு மனை - வீடு பெற

# சிவாஜி ரீயல் எஸ்டேட்ஸ்

163-மேலப்பொலிவார்டு ரோடு,

போன்: 3344 திருச்சிராப்பள்ளி-620 002.




ராக்ஷஸ
ஐப்பசி

OCTOBER 1975

ஆண்டு 40
இதழ் 10

இதழினுள்ளே....



Printed and Published by Smt. Rajamani Sitaram at Kavignar Press
P.B. No. 307, 2-A, Fort Station Road, Tiruchirapalli-620 002. Phone: 7822
Editor : **T. N. Ramachandran,** B Com., B.L.

வாடிக்கையாளர்களின் வசதிக்காக பொருட்களின் விலைகள் குறைக்கப்பட்டுள்ளது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்,

# SHANTAKUMAR INDUSTRIES

சாந்தகுமார் இண்டஸ்ட்ரீஸ்

281, K. N. K. ROAD - ERODE-3.

ஸ்டீல் பீரோ,
ஸ்டீல் கட்டில்
எஸ். டைப் சேர்,
ஸ்டூல்ஸ், ரேக்ஸ்
டைனிங் டேபிள்
சோபா கம்பெட்
மீட் ஷெல்ப்



STEEL BEREAU
STEEL COTS
S—TYPE CHAIRS
STOOLS, RAKES
DINING TABLES
SOFA CUM BEDS
MEAT SHELFS AND ALL
TYPES OF
HOUSE HOLD & OFFICE
REQUIREMENTS

# அருள் வேட்டல்




மாதவம் சிறந்து
மானிடம் உயர்க

காவதம் நான்கு கடந்த களிப்பில் ஞானக் களிற்றை வழுத்து கின்றோம்-

குணங்கள் கலந்து ரஸவாத கந்தருவ கானம் மிழற்றினர் வேட்ட அருளையே நாமும் வேட்டு நிற்கின்றோம்.

கவிஞர் முன்னே, வாக்கின் மொழி குழறி மூச்செறிந்து விழி பொழிய மெய் புளகமெய்தித் தழுதழுத்து மோகித்து நின்றதையும், அவர் தாம் இரங்கி, உரையுந் திரையு நுரையுங் கரையுமிலா மேலாம் உணர்விலக்கியக் கடலில் எம்மை ஆழ்த்தியதையும் ஆர்த்தியுடன் நினைவு கூறுகிறோம் வரண்டிருந்த மண்ணிற்கு வானம் கனிவது போல் வேட்டி ருக்கும் ரஸிகர் குழாத்திற்கு அவர் சிவாஜி மூலம் பொழிந்த அருள முதம் அளவிறந்தது.

அவரால் சிவாஜி, உளச் செய் முழுதும் பாயும் பாலாறாய், உளத்தினோடி மனம் அழியத் தேங்கி வடிகின்ற தேனாறாய் பாராமற் பார்த்தயர்ந்த பக்குவத்தினோடி வந்து நேராமல் நேர்ந்த தொரு நெய்யாறாய், தேடாமல் வாராத தெள்ளமுதாய் பிரவகித்தது.

சொல்லின் சுக நிலையில் சொக்கும் கவி மலராய் ஆங்கே பிறந்த இன்பச் சுக நேயம், இன்றும், என்றும், நொந்து தியங்கி மயங்கும் போது ஓடி வந்து நிற்கும் ஓர் உற்சாகம், சோர்வைவென்று கைதேர வரும் ஓர் உள வீரம் கவலை மழைக்கு ஓர் ஆனந்தக் குடை, வெங் கொடு வினை வெயிலிற்கு ஓர் இனியதரு. நனிபசி நேரத்தோர் நல் லுணவு தளர்ச்சி தலை சாய்க்க வாய்த்த தவத் திரு தாய்மடி.

கவிஞர் காட்டிய வழி பற்றி, அவர் தந்த ஒளி கொண்டு தாளாண்மையொடு பேராண்மை பூண்ட தகவோடு சிம்ம கதியில் செம்மாந்து செல்கிறான் சிவாஜி

ஊழ் முடித்துப் போட்ட முடிச்சாய், நவநவமாய்த் தோன்றும் நவரஸக் கலவையாய், இன்பதுன்ப மிஸ்ரமாய் இருப்பது வாழ்க்கை. இதன் விதிச் சிக்கலையும், படைப்புண்மையையும் விளக்கு ரஸவாதம் தான் இலக்கியம்,

கல்வி யென்பதும் ஓர் தீராக்' கலக்கம், இங்கே ஒல்கி இளைப் பாறுதற்கு உணர்வுச் சுக மேடையாய் உப்பரிகையாய் இலங்குவது இலக்கியம்.

தன்வயப் பட்டு, பின் தன்னை மறந்த லயப்பட்டு, ஆன்ம சையோகம் கைவரப் பெற்று, முடிவிலே தன்னை வென்று ஆளும் திறல் பெற வழிகாட்டும் அத்துவா இலக்கியம் பித்துற்றப் பேரறிவின் ஒட்டு மொத்தம் இலக்கியம். இதனை மெத்த விரும்பி விடாய் கொண்டு நண்ணுவோர்க்கு என்று துயரினை விரும்பித் தாங்கி தவத் திருக்கின்றான் சிவாஜி. அவன்தரு இன்பச் சுமை தாங்கி எழிலோடு பவனி வருகிறது இவ்வேடு. இது

'நண்ணரிது நண்ணரிது நாடரிது நாடரிது
நுண்ணுணர்வி னுண்ணுணர்வி னுண்ணுணர்வு'.

**ஆசிரியர்**

# தமிழ்நாட்டுத் திருக்கோயில்கள்

ரெட்டியார்



# சிராப்பள்ளி

கங்கையைச் சடையில் வைத்த சங்கரா போற்றி போற்றி
மங்கையைப் பாகம் வைத்த மாதொரு பாகா போற்றி
எங்களின் இறைவா போற்றி எம்முயிர்க் குயிரே போற்றி
திங்களைச் சூடி நின்ற சிவசிவ சிவனே போற்றி.

அன்பர்களை ஆட்கொள்வதற்கென்றே ஆதியும் அந்தமு மில்லாத ஆனந்தக் கூத்தன், ஆங்காங்கு கோவில் கொண்டு ஜோதி வடிவாக நின்று துயர் தீர்த்து, உயிர்காத்து வருகிறான்.

செந்தமிழ் நாட்டின் நடு நாயகமானதாக வும், சோழ சாம்ராஜ்யத்தின் தலைநகரமாகவும் புராண காலத்திலும், சரித்திர காலத்திலும் கீர்த்திமிக்க பதியாகவும் விளங்குகிறது. காவிரிக் கரையின் தென்பால் அமைந்த திருச்சிராப் பள்ளி என்னும் ஸ்தலம்.

இந்த ஸ்தலத்தில் இறைவன் புகழைக் கூறும் கொடிக் கம்பம்போல ஒரே பாறை வடிவத்தில் அமைந்திருக்கிறது. மும்முடி மலை என்னும் திருசிரபுரமலை. இம்மலை, இறைவன் தாயாகி, தயாபர மூர்த்தமாகி அடியார் உள்ளம் நெகிழ காட்சி தந்த புண்ணிய மலையாகும்.

"அப்பர்" என்று அருள் அடியார் போற்றும் ஒப்பில்லாத மூதறிஞராகிய நாவரசு, சத்தியமே செய்கிறார். தாயுமான இறைவனை தரிசித்தால் போதும். அதுகூட முடியாவிட்டால் இங்கு அமர்ந்த இறைவனை நினைத்து திக்கு நோக்கி கரம் குவித்தால்கூட போதும். நம்வினை நாசம் நாசமே என்று அழுத்தம் திருத்தமாக தலையிலடித்துச் சத்தியம் செய்வதுபோல உறுதி கூறுகிறார்,

தாயான செல்வரை தரிசிக்க அப்பர் அழைத்த அருள் அழைப்பை ஏற்று வாருங்கள் திருச்சிக்கு என்று உங்கள் அனைவரையும் அழைக்கிறேன். திருச்சிராப்பள்ளி எல்லைக்குப் பத்து மைல் தூரத்திற்கு அப்பால் இருந்து பார்க்கும் போதே, ஒரு யோக யோகீஸ்வரன் நெடிய தவத்தில் அமர்ந்திருப்பதுபோல மலைக் கோட்டை உச்சிப் பிள்ளையார்கோவில் காட்சி தரும். பக்தர்கள் மனதில் நினைத்துச் செல்லும் காரியம் சித்திபெற வேண்டுமென்று கணபதியைக் கண்டவுடன் கன்னத்தில் போட்டுக் கொண்டு கைதொழுது நிற்கும் காட்சியினையும் கண் குளிரக் காணலாம்.

மலைக்கோவில் தரிசனத்திற்கு வருகிறவர்கள் கோட்டையின் ஆசார வாயிலாக, சரித்திரத்தின் சின்னமாக, இன்றும் காம்பீர்யமாக மேற்குபுறத்தில் வீற்றிருக்கும் பிரதான வாயில் வழியாக வரும்போது மலைக்கோவில் அபூர்வமானதாக காட்சி தரும் கோட்டை வாயில் தாண்டியதும் உன்னதமான முறையில் அமைக்கப்பட்டிருக்கும் தெப்பக்குளத்தையும், அதன் நீராழி மண்டபத்தையும் காணலாம்.

இந்த தெப்பக்குளத்தின் கிழக்குப் பக்கத்தில் '' கிளைவ் ஹவுஸ் '' என்று சொல்லப்படும் சரித்திரப் பிரசித்தி பெற்ற கட்டிடம் வீற்றிருக்கிறது. இந்த தெருவிற்கு நந்திகோவில் தெரு என்று பெயர். மலைமீது அமர்ந்திருக்கும் தாயுமானவர் சன்னதி மேற்குப் பக்கம் பார்த்து அமைக்கப்பட்டிருக்கிறது. எனவே, மலைக்குன்றின் மேற்குப் பக்கத்தில் இடையாற்றுமங்கலம் ரெங்கசாமி அய்யர் உயர்நிலைப் பள்ளிக்கும், ராஜேந்திரா தனிப் பயிற்சிக் கல்லூரிக்கும் இடையே இங்கு நந்திகேஸ்வரருக்கு கோவில் அமைக்கப்பட்டிருக்கிறது. நந்தியம் பெருமானை தொழுதுவிட்டுத் தான் சாஸ்திர விதிப்படி தாயுமான இறைவனை தரிசிப்பது முறையானதாகும். சுற்றியிருக்கும் மதில்மீது நகரம் நிர்மாணிக்கப் பட்டிருப்பது திருச்சியில் மட்டும்தான் என்பது தெரியவரும்

நந்தியை வலம் வந்து தொழுத பின்னர் வெளியே வரும் போது கம்பீரமாக காட்சிதரும் ஆஞ்சநேயரையும் வணங்கித் துதித்துவிட்டு நந்தி கோவில் தெரு வழியே வடக்கு நோக்கிச் சென்றால் அங்கு நாக நாத ஸ்வாமி கோவில் இருக்கிறது.

இந்த ஆலயத்தை தரிசித்துவிட்டுப் போகலாம். சாரமா முனிவர் என்ற பெருந்தகை நந்தவனம் அமைத்து இங்கு வீற்றிருக்கும் நாக நாதரையும் மலையின்மேலிருக்கும் தாயுமான



உயர்ந்தும், காம்பீரியமாகவும் வீற்றிருக்கும் நந்திகேஸ்வரனை தொழுது வணங்கிவிட்டு உயரே கோவில் கொண்டிருக்கும் இறைவனை நிமிர்ந்து நோக்குவோம். இவ்வாறு பார்க்கும் போது மலைக்கோவில் நிர்மாணம் நமது கண்களுக்கு தெளிவாகத் தெரியவரும் ''ப'' என்ற எழுத்தை ''ᒥ'' திருப்பிப் போட்டதுபோல மலையின் அடிவாரத்தில் ஒரு மதில் சுவர் எழுப்பப்பட்டிருக்கும் செய்தி தெரியவரும். இந்த மதிற் சுவர்மீதே மலைக்கோட்டை மேற்கு, வடக்கு, தெற்கு தெருவுகள் அமைக்கப்பட்டிருக்கும் வரலாறும் தெரியவரும். கோவிலைச் வரையும் துதித்து வந்திருக்கிறார். இதுமட்டுமல்ல, உலக க்ஷேமத்திற்காக மக்களுக்கு வாழ்க்கையில் நம்பிக்கையூட்டுவதற்காக, சக்தி மானிட உருவந்தாங்கி மண்ணில் பிறந்து இறைவனைப் போற்றி நிற்பதும், இறைவன் சக்தியை ஆட்கொண்டு திருமணம் புரிவதும் தொன்று தொட்டு வரும் புராணச் சிறப்பாகும்.

உமாதேவி திரிசிரபுரத்தில் தாமரை மலரில் தான் பிறந்தது. கார்த்திகை முனிவரால் வளர்க்கப்பெற்று, மட்டுவார் குழலி என்ற நாமத்துடன் வளர்ந்து, இறைவனையடைய

தவம் இருந்து இறைவனை பதியாக அடைந்த இடமே நாகநாதர் ஆலயமாகும் கோவிலையும் தீர்த்தத்தையும் வலம் வரும்போது மலைக் கோட்டை வடக்குத் தெருவின் மதில் தோற்றம் கம்பீரமாக காட்சியளிப்பதைப் பார்க்கலாம் இங்கு தொடங்கி வடக்கு ஆண்டார்தெரு புதுப்படி சந்துவரை குறைந்துகொண்டே இச் சுவர் செல்லுகிறது.

வடக்கு ஆண்டார் தெருவைக் கடந்து, கிழக்கு ஆண்டார் தெருவின் வழியாக வரும். இங்கு தாயுமானவர் தேர்முட்டி இருக்கிறது. இதற்கு எதிரில் தளவாய்க்குளம் என்ற பெயரில் ஒரு குளம் இருப்பதையும் காணலாம்.

திப்பு சுல்தான் காலத்தில் மலைக்கோவில் தேர் எரிக்கப்பட்டு விட்டதாகவும், அதற்கு ஈடு செய்ய துறையூர் ஜெமீந்தார் தளவராய் பிரசன்ன வெங்கடாசல ரெட்டியார் புதிய தேர் செப்பனிட்டுக் கொண்டு தேர் இழுப்பவர்களுக்கு தாகம் தணிக்க தளவாய்க்குளம் என்ற பெயரில் ஒரு குளம் வெட்டியிருப்பதாகவும் தெரிகிறது.

தேட் முட்டியைத் தாண்டி சறுக்குப்பாறை சந்து என்ற பெயரால் இதுவரை அழைக்கப்பட்டு இப்பால் மகாவித்வான் மீனாட்சிசுந்தரம் பிள்ளைத்தெரு என்று அழைக்கப்பெறும் தெருவின் வழியாகச் சென்றால், மலைக்கோவிலின் ஆசார வாயிலான யானை மண்டபத்தின் வாயிலுக்கு வந்து சேரலாம்.

கட்டி முடியாத கோபுரம் எங்கிருந்தாலும் அது ராயகோபுரம் என்று அழைப்பது சரித்திரம் காட்டும் செய்தியாகும் இங்கேயும் பிரமாதமான முறையில் கோபுரம் கட்ட அடித்தளம் போடப்பட்டு தூணும் நிறுத்தப்பட்டிருக்கிறது கோபுரம் கட்டப்படவில்லை.

யானை மண்டபத்தின் வழியாக மேலே செல்லலாம். ராய கோபுரத்தின் வழியாக கீழே மாணிக்கவிநாயகர் சந்நதிக்குச் செல்லலாம் என்றாலும், இப்பொழுது மலைக்கோட்டை தெற்குத் தெருவின் தென்மேற்கு மூலைவரை சென்றுவருவது நல்லது பிரசித்தி பெற்றதும் பற்பல சிற்பங்கள் நிறைந்ததுமான கீழ் பல்லவர்க் குகை அங்கேதான் இருக்கிறது.



மச்சுப் பிள்ளையார்

மலைப்பாறையைக் குடைந்து பற்பல சிற்பங்களுடன் குகை அமைக்கப்பட்டிருக்கிறது. எந்த காரணத்தாலோ சிலைகள் சேதப்படுத்தப் பட்டிருக்கின்றன. இவைகளைச் செம்மைப் படுத்திவிடமுடியுமானால் மாமல்லபுரத்து கலைச் செல்வத்தின் தோற்றம் இங்கும் கண்டு மகிழலாம்.

இந்த குகை கோவிலின் அருகே இருந்து மலைக்கோவிலையும், அதன் அமைப்புக்கு வினக்கமாக இருக்கும் மதில் சுவரையும் பார்க்கும் போது நம்முடைய முன்னவர்களின் ஆற்றலும், கலையார்வமும், நிபுணத்துவமும். நம்மீது சூழ்ந்த நம்பிக்கை வைத்து அற்புதமான இந்த கலைக்கோவிலைக் கட்டி முடித்த செயல் திறமையும் நம்மையே பிரமிக்கவைத்துவிடும். பாறை மீது செங்குத்தாக 100 அடிக்கு மேலே சுவர் எழுப்பிய கட்டிடக் கலை நிர்மாணம் இந்த காலத்து நிபுணர்களை மலைச்கவைத்து விடுகிறது என்பதையும் இங்கு இருந்து காணலாம்,

மீண்டும் யானை மண்டபத்தின் வாயிலுக்கு வருவோம். மேலே செல்ல படி வரிசையாகத் தெரிகிறது. மண்டபத்தின் இடது பக்கத்தில் வாகன மண்டபம் அமைந்திருக்கிறது இந்த மண்டபத்தில் கோவிலைச் சேர்ந்த எல்லா வாக



தாயுமானவர்

னங்களும் வைக்கப்பட்டிருக்கின்றன. இந்த வாகனங்களில் சில தர்மபுர ஆதீனத்தைச் சார்ந்த மௌன மடத்தின் ஆதிக்கத்தில் இருக்கின்றன.

வாகன மண்டபத்தைவிட்டு சில படிகள் மேலே சென்றதும் தருமையாதீனத்தின் ஆதிக்கத்திலுள்ள மவுன மடம் இருப்பதைப் பார்க்கலாம். இந்த மலைக்கோவில் ஆஸ்தியில் பெரும் பகுதியின் நிர்வாகமே மவுன மடத்தின் ஆதிக்கத்தில் இருக்கிறது. தருமையாதீனகர்த்தர் வந்து தங்குவதற்கும், காரியாலயம் நடத்துவதற்கும் இங்கு விசாலமான கட்டிடம் இருக்கிறது.

மவுன மடத்தைத் தாண்டி மேலே சில படிகள் சென்றால் நூற்றுக்கால் மண்டபம் அமைந்திருப்பதைக் காணலாம். இந்த மண்டபத்தில் சமய இலக்கிய சொற்பொழிவுகள்நடைபெறுவதுண்டு

நூற்றுக்கால் மண்டபத்திற்கு எதிரே ஒரு விசாலமான கோயிலும் இருக்கிறது.

இன்னும் சில படிகள் மேலேறிச் சென்றால் இங்கு ஒரு கோவில் இருக்கிறது. இந்த மண்டபத்திற்கு சகஸ்ரலிங்க மண்டபம் என்று பெயர். ஏராளமான லிங்கங்கள் ஒரு லிங்கத்தில் அமைந்திருக்கின்றன இதனை ஒவ்வொருவரும் பார்த்து மகிழவேண்டும்.

இன்னும் சில படிகள் மேலேறிச் சென்றால் ஒரு வரலாற்றுக் காட்சியைக் காணலாம் இறைவன் தன் அடியாரின் எத்தகைய கருணை உடையவன் என்பதைக் காட்டும் காட்சியிது. தாயுமானவர் என்ற பெயர் வருவதற்கே காரணமான நிகழ்ச்சியை நீங்கள் தெரிந்துகொள்ள வேண்டாமா?

திருச்சிராப்பள்ளியில் தனகுப்தன் என்னும் செட்டியார் ஒருவர் வணிகம் செய்துவந்தார். இவரது இல்லத் தலைவியின் பெயர் இரத்தினவதி இந்த அம்மையார் மலைமீது அமர்ந்திருக்கும் சிவபெருமானை அனுதினம் தவறாது தொழுது வந்தாள். இறைவன் கருணையில் இரத்தினவதி கருவுற்றாள். பிரசவ காலமும் நெருங்கியது இரத்தினவதியின் தாயார் காவிரிப்பூம்பட்டிணத்தில் இருந்தாள் மகளின் பிரசவத்திற்கு உதவி செய்ய திருச்சிராப்பள்ளியை நோக்கி வந்துகொண்டிருந்தாள். காவிரி நதியில் வெள்ளம் பெருக்கெடுத்தோடி, தாய் திருச்சிராப்பள்ளிக்கு வரமுடியாமல் வெள்ளத்தால் தடுக்கப்பட்டாள்

தனது தாயின் வரவை எதிர்பார்த்த இரத்தினவதி பிரசவ வேதனை தாங்க முடியாமலும், தனக்கு உதவிசெய்ய உற்றார் இல்லாமையாலும் திக்கற்றவர்களுக்குத் தெய்வமே துணை



வேழமுகத்தானை நோக்கி வேழம் மேல் வீற்றிருக்கும் சோழர் அரசன் கல்லணைக் கரிகாலன்

என்று ஆன்றோர் சொன்ன வாக்கை நினைத்து சிராப்பள்ளிக்குன்றில் அமர்ந்த கோமானை மன மாரத் துதித்து நின்றாள். அதுசமயம் தாய்வந்து சேரவே பிரசவமும் சுகமாக முடிந்தது. கண் ணுங் கருத்துமாக பேரக்குழந்தையையும் இரத் தினவதியையும் தாய்க் கிழவி கவனித்து வந் தாள். ஒரு வாரம் ஆயிற்று உண்மையான தாய் ஆற்றில் தண்ணீர் வடிந்தவுடன் வந்து சேர்ந்தாள். இரு தாய்மாரைக் கண்டு இரத்தி னவதி திகைத்தாள், இறைவன் காட்சி தந்து தாமே தாய் வடிவமாக வந்து பக்தையின் துய ரத்தை தீர்த்ததாக அறிவித்த காட்சியே வியக் கத்தக்கது. அன்றிலிருந்து இறைவனுக்குத் தாயுமானர் ' மாத்ரு பூதேஸ்வரர்'' என்ற பெயரே நிலைபெற்றுவிட்டது இன்னும் பிரசவ காலத்தில் இந்த தாயுமானவரை தொழுது வணங்குவோருக்கு சுகப் பிரவசமே ஏற்பட்டு வருகிறது என்பது அனுபவபூர்வமான உண்மை,

இம்மலையில் மூன்று சிகரங்கள் இருப்பதால் இதற்குத் திரிசிரபுரம் என்று பெயர் வந்ததாகச் சொல்லுவார்கள். திரிசிரன் என்ற அரக்க பக் தன் பூசனை செய்தும், இந்த இடத்தை ஆண்டும் வந்ததால் திரிசிரபுரம் என்று பெயர் வந்ததாக வும் சொல்லுவார்கள்

இந்த வரலாற்றை அறிந்தபின்னர் மேற்கு பக்கமாகச் செல்லும் படிகளின் வழியே ஏறிச் சென்று பின்திரும்பி வடக்குப் பக்கம் ஏறிச் சென்றால் இங்கு பாதை பிரிகிறது, உச்சிப் பிள் ளையார் கோவிலுக்குச் செல்லும் பாதை கிழக் குப் பக்கத்திலும் இறைவன் சன்னதிக்குச் செல் லும் பாதை மேற்குப் பக்கமாகவும் பிரிகிறது.

உச்சிப்பிள்ளையாரை தரிசித்துவிட்டு பின் னர் இறைவன் சன்னதிக்குப் போகலாம்.

மலைக்கோவில் மேல் உள்ள பல்லவர் குகை யில் பல கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன.

இவை 6வது நூற்றுண்டில் வாழ்ந்த குணபரன் என்னும் மகேந்திரவர்மனுல் இந்த குகைக் கோவில் உருவாக்கப்பட்டதாகத் தெரிகிறது. வடமொழியிலும் தமிழிலுமாக இருக்கும் கல்வெட்டுக்களில் இருந்து சிலது மட்டும் சொல்லி விடுகிறேன்.

நாவுக்கரசரை பலவாறு துன்புறுத்திய மகேந்திர பல்லவனே, தானும் மதம் மாறி சைவனுனன் என்று பெரிய புராணம் கூறும் செய்தி. அந்த அரசனே இக்கோயிலைக் கட்டினுன் என்றும் இக்கல்வெட்டினுல் தெரிகிறது.

1) குணபரன் என்ற அரசன் இந்த லிங்கத்தினுல் ஞானம் பெற்றுன் உலகத்தில் நீண்ட காலம் இருப்பதாக

2) சோழநாட்டின் சிகரமலையான இந்த சிவன் கோவில் அழியாத ஆபரணம் போன்றது. இதன் ஜோதி சங்கரனுடைய ஜோதி போன்றது

3) சத்ய சந்தனுடைய பூதவுடல் புகழ் பெற இது கல் தச்சனுலே அமைக்கப்பட்டது

4) சத்துரு மல்ல அரசன் அர்த்தபதியாதலின் மலை அரசன் மகளை மணந்த கிரீசனுடைய பெயரின் பொருளை விளக்க இம்மலையில் ஈசனை பிரதிஷ்டை செய்தான்.

5) இறைவருக்குக் குணபரன் வானளாவிய உன்னதமான இக்கோயிலை அமைத்தான்

தமிழில் சில சாசனங்கள் தானம் பற்றி குறிப்பிடப்பட்டிருக்கிறது. அடுத்து இருக்கும் வசந்த மண்டபம் தளவாய் மண்டபம் என்ற பெயரால் அழைக்கப்படுகிறது. இம்மண்டபத்தையும் துறையூர் ஜமீந்தார் அவர்களே கட்டியிருக்கக் கூடும் என்று தெரிகிறது சுவாமி சன்னதிக்குப் போகும் சித்திர மண்டபத்தில் தளவாய், துறையூர் ஜெமீந்தார் என்று சிலை வைக்கப்பட்டிருந்திலிருந்து இந்த முடிவுக்கு வர வேண்டியிருக்கிறது

மணிமண்டபம் 1918-ல் கட்டப்பட்டது. இதில் இருக்கும் மணியின் கனம் 2½டன் ஆகும் 4 அடி 8 அங்குல நீளமும் 4 அடி 6 அங்குல அகலமும் உடையது. இதில் இருக்கும் மணியின் தோற்றம் — உறையூர் உலகநாத செட்டியார் அவர்கள் முயற்சியால் பொதுமக்களிடம் வசூலிக்கப்பட்ட தொகையைக் கொண்டு இது நிர்மாணிக்கப்பட்டது.

இனி மேலே உச்சிப்பிள்ளையார் கோவிலுக்குப் போவோம். மலைப்பாறையிலேயே படிக்கட்டுகள் செதுக்கப்பட்டிருப்பதைப் பாருங்கள் கால் பட்டு பட்டு கல்லும் தேயும் என்பதற்கு இந்தப் படிக்கட்டு சான்று

மலைமீது இருக்கும் உச்சிப் பிள்ளையார் கோவிலைப் பற்றி ரஸமான வரலாறு உண்டு. ராமரிடம் ரங்கநாதர் மூர்த்தத்தைப் பெற்ற விபீஷணன் இலங்கைக்கு எடுத்துச் செல்லும் பாதையில் காவிரியின் வடகரைக்கு வந்தான். ரங்கநாதர் சிலை இலங்கைக்குப் போய்விடக் கூடாதென்று அனைவரும் இந்த மலைமீது இருக்கும் விநாயகரை வேண்டினார்கள். கணபதி பிராமணச் சிறுவன் வேடன் தாங்கி விபீஷணனிடம் செல்ல, வேண்டுகோளின் பேரில், ரங்கநாதரை கீழே வைக்காமல் இருப்பதாகச் சொல்லிஅவன் உடல் உபாதி முடித்து வருவதற்குள் ரங்கநாதரைக் கீழே வைத்துவிட்டு ஓடி வந்து மலை மீது அமர்ந்துவிட்டதாக வரலாறு கூறும். ஆத்திரம் கொண்ட விபீஷணன் பிள்ளையார் தலையில் குட்ட அந்த குட்டில் ஏற்பட்ட பள்ளம் இன்னும் உச்சி விநாயகர் தலையில் இருப்பதாகச் சொல்லுகிறார்கள்,

இந்த இடத்திலிருந்து பார்க்கும்போது அற்புதமான காட்சியாக காவிரியும் திருவரங்கமும், திருஆனைக்காவும், ஏன், திருச்சி நகரமும் தெரியவரும் இந்த உச்சி விநாயகர் கோவிலுக்கு கிறிஸ்தவர்களும், முஸ்லீம்களும் வருகிறார்கள். வெளிநாட்டு யாத்ரீகர்களும் வராத நாளே இல்லையெனலாம். இந்த உச்சி விநாயகர் கோவிலை கரிகால் சோழன் கட்டி முடித்த பிறகுதான் ஆட்சி கிடைத்தது என்று சரித்திர குறிப்பில் தெரிகிறது.

மலைப் பாதையிலிருந்து திரும்பி மேற்குப் பக்கமாகச் சென்றால் துவஜஸ்தம்பம்தெரிகிறது. இங்குள்ள விசாலமான மண்டபத்தில் சிவபெருமானது விராட் சொரூபம் சித்ர ரூபமாக தீட்டப்பட்டிருக்கிறது சகஸ்ரலிங்கங்களும், சன்னதிக்குச்செல்லும் பாதையில் தென்புறம் விநாயகர் கோவிலும் வடபுறம் அறுமுகவன் கோவிலும் அமைந்துள்ளன,

அறுமுகவன் அபூர்வமான கலையழகுடன் ஒரே கல்லில் செதுக்கப்பட்டு கொஞ்சும் அழகுடன் காட்சி தருகிறான்.

மேலே செல்வோம் இந்த இடத்தில் சற்று கவனித்தால் திரிசிரபுரத்தில் உள்ள இந்த மலையைப்பற்றி பூர்வ வரலாறு தெரிந்துகொள்வது நல்லதல்லவா? ஆதிசேடனுக்கும் வாய்வுக்கும்

ஏற்பட்ட பலாபல போட்டியின் காரணமாக வாயுவின் தீரத்தால் கயிலை மலையிலிருந்து சிரங்கள் பூமியில் மூன்று பாகத்தில் போய்விழுந்தன அதன் பிரதானமான பகுதியே மும்முடி மலையான இந்த மலை என்று பூர்வ வரலாறு கூறுகிறது மூன்று முடியில் ஒரு முடியில் விநாயகருக்கும், இரண்டாவது முடியில் சிவபெருமானுக்கும், மூன்றாவது முடியில் அம்மனுக்கும் ஆலயம் அமைத்திருக்கிறார்கள். இந்த மலையின் சிகரத்தையே லிங்கசொரூபமாக வகுத்துவிட்ட அற்புதம் எனப்பெயர் பெற்றது, சைவர்களில் சிலர் கோவில் மீது வந்து இறைவனைத் தொழாமல் தெருவில் நின்றபடியே தொழுது வணங்குவார்கள், காரணம் இறைவன் இந்த மலை வடிவமாகவே விளங்குகிறார் என்பது அவர்கள் நம்பிக்கை.

இந்த மலை உச்சிக்குச் செல்ல நாம் இது வரை ஏறி வந்த படிகளின் எண்ணிக்கை 417 ஆகும் படி பூராவும் மேலே கட்டிடம் கட்டி மூடப்பட்டிருப்பது ஒரு சிறப்பானதாகும். மண்டபத்திற்கு மேல் மண்டபம் கட்டி இக்கோவிலை சிறப்பித்திருக்கிறார்கள்.

சுவாமி சன்னதிக்குச் செல்லும் போது சித்திர மண்டபம் வருகிறது. இந்த மண்டபத்தில் ஸ்தல வரலாறு பூராவும் சித்திரங்களாகத் தீட்டப்பட்டிருப்பதும், தூண்களில் அற்புதமான சிற்பங்கள் செதுக்கப்பட்டிருப்பதையும் காணலாம்.

இறைவன் சன்னதிக்குப் போகும் போது தட்சிணாமூர்த்தி சன்னதி வருகிறது. இந்த சன்னதியில்தான் மவுன குருவிடம் உபதேசம் பெற்றார் தாயுமானார் என்ற தமிழ் சித்தர், திருச்சிராப்பள்ளியில், அரசு செலுத்திய விஜய ரெகுநாத சொக்கலிங்க நாயக்கரின் அரசியல் கணக்கரின் புதல்வராக திருச்சியில் தாயுமான அடிகள் அவதாரம் செய்தார்.

வளர்ந்து வருகையில் இந்த சந்நிதியில் உபதேசம் பெற்று தமிழ் உள்ள வரை தானும் வாழும் சிவாநு பூதிச் செல்வராக விளங்குவது இந்த ஸ்தலத்தின் சிறப்புக்கு ஒரு சிறப்பாகும். இராமநாதபுரத்தில் அடிகள் சமாதியடைந்தாலும், தாயுமான இறைவன் புகழை உலகெங்கும் பரப்ப தவ முனிவரான இவரது வரலாறு தமிழ் மொழிக்கும் சைவ உலகத்திற்கும் பொக்கிஷமாகும்.

தாயாகி வந்த தயாநிதியாகிய எம்பெருமான் அதிருத்ரமூர்த்தியாகவும் விளங்கியவர் என்பதையும் தெரிந்துகொள்வது நல்லது. இந்த மூர்த்தத்திற்கு அபச்சாரம் செய்தால் அதன் பலன் என்ன என்பதையும் அறிந்து தெளிவடைய வேண்டும்.

நாகநாதர் கோவிலைப்பற்றிச் சொல்லும் போது சாரமா முனிவர் நந்தவனம் அமைத்து, செவ்வந்தி மலர் செடி பயிரிட்டு மலர் பறித்து சூடி நாகநாதரையும், தாயுமானவரையும் வழிபட்டு வந்தார். அப்பொழுது உறையூரைத் தலைநகராகக் கொண்டு பராந்தக சோழன்

ஆண்டு வந்தான். முனிவருடைய நந்தவனத்தில் புகுந்து ஒருவன் இறைவனுக்காக இருக்கும் மலரைத் திருடிக்கொண்டு போய் சோழ மன்னனின் மனைவிக்குக் கொடுத்து வந்தான் முனிவர் இந்த செய்கையைக் கண்டித்து அரசனிடம் முறையிட்டார், அரசன் செவி மடுத்தானில்லை. அரசனே நீதி தவறினால் என்செய்வது? முனிவர் இறைவனிடம் முறையிட்டார். கிழக்கு முகமாக கோயில் கொண்ட தாயுமானவர் மேற்கு முகம் திரும்பினர். உறையூரில் மண்மாரி பொழிந்தது. அரசனும் கருவுற்ற அவன் மனைவியும் தப்பி ஓடினர். ஓடியவரைத் தொடர்ந்தது மண்மாரி அரசன் மடிந்தான் அவன் மனைவி ஒரு பிராமணனால் காப்பாற்றப்பட்டு ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். இந்த குழந்தைதான் தந்தை செய்த பிழைக்கு, மலைக்கோவில் உச்சி விநாயகர் கோவிலைக் கட்டி ஊரார் மெச்சும் புகழ் கொண்ட கரிகால்சோழன்

சுவாமியையும் அம்மனையும் வழிப்பட்டுக் கீழேயிருக்கும் மாணிக்க விநாயகரை வழிபடப் போகலாம் அதற்குமுன் கோவில் திருப்பணிகள் பற்றிய விவரம் இதோ.

இயல்பாகவே திருமலைக் கொழுந்தாய் முளைத்திருக்கும் மூலவரான சிவலிங்கமூர்த்தி அமைந்துள்ள கருப்பக்கிருஹம் திரிசிரசு செய்த திருப்பணி.

அதைச் சுற்றிலும் உள்ள திருமதில் கண்டியன் தேவ மகாராஜாவின் திருப்பணி.

அதைச் சுற்றிலும் கம்பத்தடி சுற்றுவரைக்கும் மகாபலி சக்ரவர்த்தி செய்த திருப்பணி.

மூல லிங்கமூர்த்திக்கு முன் மண்டபம் சுற்றிலும் சூராரக்க சோழன் சக்ரவர்த்தி செய்த திருப்பணி. மலையைச் சுற்றிலும் கட்டியிருக்கிற திருமதிலும் இவன் திருப்பணியே

உச்சிப்பிள்ளையார் கோவிலும், சகஸ்ரலிங்கேசர் கோவிலும் சுகந்த குந்தளாம்பிகை திருக்கோயிலும், முன் மண்டபமும், சுற்று மண்டபமும் கரிகால் சோழன் செய்த திருப்பணி.

வன்னியடிக்குத் தென்புறமிருக்கிற வாசல் பிரபுட தேவராயர் திருப்பணி

(கி. பி 1522) திருமலை சவுரி நாயக்கர் கம்பத்தடி மண்டபம் கட்டிய திருப்பணி.

(கி.பி. 1565) திருக்கல்யாண நூற்றுக்கால் மண்டபம் பெரியவீரப்ப நாயக்கர் செய்த திருப்பணி.

இதே காலத்தில் கோடைத் திருநாள் மண்டபமும், கொலு மண்டபமும் தீக்ஷப்பய்யர் திருப்பணி.

(கி, பி 1919) விஜயரெங்க சொக்கநாத நாயக்கர் கொட்டாரம், வன்னியடி மண்டபம் கட்டிய திருப்பணி.

(கி பி. 1708) விஜயரெங்க சொக்கலிங்க நாயக்கர் காலத்தில் ஜெவந்தியாண்டி சேர்வைகாரன் முன்னிலையில் அலுப்பி என்கிற தேவ அடியாள் வன்னியடிக்குக்கீழ் ஐந்நூறுகால் மண்டபம் மண்டபம் கட்டியதிருப்பணி. இதனை ஆயிரங்கால் மண்டபம்என்றும் சொல்வார்கள். மலைவாசல் ராஜகோபுரம் கீழ்த் தூணில் அலுப்பியம்மன் உருவம் அமைந்திருப்பதைக் காணலாம்.

(கி பி. 1540-52) விஸ்வநாத நாயக்கர் காலத்தில் நடுநீராழி மண்டபம் கட்டிய திருப்பணி நாளது வரை மேலும் திருப்பணிகள் நடைபெற்று வந்துள்ளன.

சக்தி மிகுந்த, வரப்பிரசாதியான மாணிக்க விநாயகரை தினசரி காலையிலும், மாலையிலும் சிறுவர் முதல் கிழவர் வரை, பாப்பா முதல் பாட்டி வரை தரிசித்து மகிழுவது பக்தி பரவசமூட்டும் ஒரு புனிதக் காட்சியாகும்.

மாணிக்க விநாயகரை விட்டுப் பிரிய மனமின்றி, மெதுவாகக் கடைத்தெருவிற்கு வந்து சேருகிறோம்.

'திருச்சிராப்பள்ளி யென்னலும் தீவினை நரிச்சிராது நடக்கும் நடக்குமே!'

—● ●—

# சில்லறை விஷயம்

''ஒங்க கிட்ட நாலு பைசா இருந்தாக் குடுங்க. பத்து பைசா பாக்கி தரேன்''

''பதினஞ்சு பைசா சில்லறையாக் கொடுங்கள்''

''ஐம்பது பைசாவிற்குக் குறைவாக சாப்பிடுங்கள் தயவு செய்து சில்லறையாகத் தரவும்''

''அஞ்சு பைசா இல்லேம்மா. இந்தாங்க மிட்டாய்''

''எம்பா கண்டக்டர், பாக்கி சில்லறை இன்னும் வல்லியேப்பா.''

''இதுக்குத்தான் சில்லறை இல்லேன்னு பஸ்ல ஏருதீங்கன்னது, சொன்னாக் கேக்காம ஏறிட்டு படா ரோதனையாப் போச்சு சில்லறை இல்லேம்மா... வேணும்னு சீட்ல எழுதித் தரேன். ஆபீஸ்ல வந்து வாங்கிக்கம்மா'' (ஆபீஸ் போக வர நாற்பது பைசா செலவு செய்ய வேண்டும்)

இன்னும் பாக்கியைப் பற்றியே வாய்திறக்காமல் வாடிக்கையாளர்களை அனுப்பிவிடும் கடைக்காரர்கள், பேருந்து நடத்துனர்கள்.. இத்யாதி இத்யாதி சில்லறை இல்லாமல் வெளியூர் போகும் பஸ்ஸில் ஏறாமல் போனவர்களும், சினிமா போகாமல் இருந்தவர்களும்— சில்லறையைக் கோட்டை விட்டு விட்டு வெளியூர் போய்ச் சேர்ந்தவர்களும், சினிமா பார்த்தவர்களும் அநேகர்

சில்லறைத் தட்டுப்பாடு வந்தாலும் வந்தது, பலருக்கும் பலவித அனுபவங்கள்.

'பட்டணத்தில் அஞ்சு ரூபா நோட்டை ஷோ கேஸல வச்சு பத்து ரூபாய்க்கு வித்திடுவான்' என்று பட்டிணத்தைப் பற்றி ஒருவர் சொல்வதாக ஒரு திரைப்படத்தில் வருகிறது

சில்லறைத் தட்டுப்பாடு அந்த விஷயத்தை மெய்யாக்கி விட்டது பட்டணத்தில் மட்டுமல்ல. அங்கிங்கெனாதபடி எங்கும் உண்மை ஆகிவிட்டது. ஆம்! எண்பது பைசா சில்லறையை ஒரு ரூபாய்க்கு விற்கிறார்களே!

அதுபோகட்டும்.. இதைப் பற்றியெல்லாம் எழுதி ஏன் எங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்றே என்கிறீர்களா! என் வயிற்றெரிச்சலைத் தணிப்பதற்குத்தான் என்பது ஒரு காரணம். இன்னொரு காரணம் இந்த சில்லரைப்பஞ்சம் தீர, ஒரு உருப்படியான யோசனை கூறி அனைவரது துன்பத்தையும் தீர்க்கலாமே என்ற நோக்கம். (நான் என்ன எழுதப் போகிறேன் என்பதை நீங்கள் மிக மிக ஆவலுடன் எதிர்பார்க்கிறீர்கள் என்பதை என் மனக்கண்ணாகிய டி.வி.யின் மூலம் காண்கிறேன்)

சில்லறைப் பஞ்சத்தைத் தீர்க்கக்கூடிய வழியை சொல்வதற்கு முன் எப்படி அந்த வழியைக் கண்டுபிடித்தேன் என்பதையும் எழுதி விடுகிறேன். (விதியே என்று படித்துத் தொலைக்கவேண்டியதுதான். வேறு வழியில்லை)

அதாவது,

சில மாதங்களுக்கு முன்பு ஒரு நாள் நான், என் சகதர்மினி, குழந்தைகள் சகிதம் சினிமா பார்க்க ஒரு தியேட்டருக்குச் சென்றிருந்தேன் டிக்கட் கொடுக்குமிடத்தில் 'டிக்கட்டிற்கான கட்டணத்தை சில்லறையாக கொடுக்கவும் இல்லாவிட்டால் பாக்கி சில்லறைக்குப் பதிலாக சாக்லெட்டுகள் கொடுக்கப்படும்' என்ற அறிவிப்புப் பலகை காணப்பட்டது. என் கையிலோ (பர்ஸிலோ) சில்லரை இல்லை அக்கம் பக்கம் கேட்டுப் பார்த்தேன. பயனில்லை விதியே என்று, பாக்கி சில்லறைக்குப் பதிலாக கை

'ஜானகி மைந்தன்'

நிறைய சாக்லெட்டுகளை வாங்கிக்கொண்டு கொட்டகைக்குள் நுழைந்தேன் — சரி... இடைவேளையில் குழந்தைகளுக்கு சாக்லெட்டுகளைக் கொடுத்து வாயை அடைத்துவிடலாம் என்ற நினைப்புடன் இருந்தேன். மெதுவாக என் மனைவி 'என்ன, இந்த சாக்லெட்டை கொழந்தேளுக்கு கொடுத்துடாதீங்கோ... சகிக்கலே' என்றாள், சாக்லெட் போன்ற தீனி வகைகளில் அவளுக்கு விருப்பம் அதிகம். வேறு வழியின்றி குழந்தைகளுக்கு வெறு எதையோ வாங்கிக் கொடுத்து சமாளித்தேன். (பாக்கி சில்லரை யில்லாமல் கூட ஒன்று வாங்கி அதை குழந்தைகளுக்குப் பங்கு போடுவதற்குப்பட்ட அவதி யிருக்கிறதே அது ஒரு தனிக் கதை) அப்போதுதான் ஒரு ஐடியா தோன்றியது அதை அவ்வளவாக சீரியஸாக நினைக்கவில்லை ஏன்? மறந்துவிட்டேன் என்று கூடச் சொல்லலாம்.

சில நாட்கள் சென்றன.

ஒருநாள்... வெற்றிலைச் செல்லம் காலியாக இருப்பதைக்கண்டு. நிரப்புவதற்காக. பெட்டிக் கடைக்குச் சென்று வெற்றிலை, சீவல் முதலியன வாங்கிவிட்டு — பணம் கொடுத்தேன், பாக்கி சில்லறை இல்லை என்று கூறி, அதற்குப் பதிலாக இரண்டு பிஸ்கட்டுகளை எடுத்துக் கொடுத்தார் கடைக்காரர். (மனைவி ஏதாவது குறை காணப் போகிறாளே என்ற பயத்தில் இரண்டையும் தின்றுவைத்தேன்) இதேபோல மளிகைக் கடைக்காரர் பாக்கி சில்லறைக்காகக்கொடுத்த பேரீச்சம் பழத்தையும் தின்று வைத்தேன். அன்றிலிருந்து சில நாட்கள் இவ்விதமாகத் தானே பிஸ்கட், சாக்லெட், ஆரஞ்சு மிட்டாய் (பெப்பர்மெண்ட்), பேரீச்சம் பழம் போன்றவைகளை வயிற்றுக்குள் செலுத்த ஆரம்பித்தேன். அப்பொழுதுகூட அந்த ஐடியா திரும்பவும் நினைவிற்கு வரவில்லை,

மேலும் சில நாட்கள் சென்றன.

ஒரு ஞாயிற்றுக்கிழமை பொழுது போகாமல் மதியம் நன்றாகத் தூங்கி எழுந்து. மனைவி தந்த காபியைக் குடித்துவிட்டு, டிபனை ஒரு கை பார்த்துவிட்டுகையிலகப்பட்ட ஒருபுத்தகத்தை எடுத்துவைத்துக் கொண்டு ஈஸிசேரில் சாய்ந்தேன். வாசல் வராந்தாவில் குழந்தைகள் சத்தமிட்டு விளையாடிக் கொண்டிருந்தனர் இடையிடையே 'பத்து காசுக்கு கீரை கொடு' 'இந்தா நாலரை, பாக்கி அஞ்சு காசு தா', 'வெண்டைக்கா என்ன விலை?' என்று குழந்தைகள் பேசுவது கேட்கவே. ஏதோ ஒரு ஆவலால் தூண்டப்பட்டு, அவர்கள் அறியாவண்ணம் எட்டிப்பார்த்தேன் (சில்லறைக் காசுகளை எனக்குத் தெரியாமல் எடுத்து வந்து விளையாடுகிறார்களோ என்ற சந்தேகமும் இருந்தது) என்ன பயன், (வயது 5) ஒரு சிகரெட் டப்பா அட்டையைக் கையில் வைத்துக் கொண்டு 'இந்தா பத்து பைசா .. கொத்த மல்லி கொடு' என்று பக்கத்து வீட்டுப் பெண்ணிடம் (வயது6) சொல்லிக்கொண்டிருந்தான் அவள் ஒரு பிளாஸ்டிக் கூடையிலிருந்து, தோட்டத்தி

லிருந்து பறித்து வந்த வேப்பிலையைக் கொஞ்சம் கொடுத்துவிட்டு 'இந்தாங்க பாக்கி அஞ்சு காசு' என்று புளியங் கொட்டை ஒன்றைக் கொடுத்துவிட்டு, கூடையை எடுத்துக்கொண்டு நடந்தாள்.

அப்போதுதான் .. அந்த விநாடிதான் எனக்கு அந்த ஐடியா உண்டாயிற்று. என் மனம் இன்பக்களிப்பில் துள்ளியது 'யுரேகா' என்று கத்த வேண்டும்போல் இருந்தது.

'சில்லறைப் பஞ்சம் தீர்த்த சீலர்' என்று எனக்கு பட்டம் வழங்குவது போலவும். டில்லியிலே நடக்கும் பாராட்டு விழாவில் பல்லாயிரக் கணக்கானோர் முன்னிலையில் ஜனாதிபதி எனக்கு விருது வழங்குவது போலவும் (பத்மஸ்ரீயா, பத்மபூஷணா என்று நினைவில்லை) அயல் நாட்டுப் பத்திரிகையாளர்களும், டெலிவிஷன் நிலையத்தினரும் என்னைப் பேட்டி காண்பது போலவும் நினைவுகள் தோன்றின.

(அடடா... நோபல் பரிசு வாங்கறமாதிரித் தோணினாலும் எங்களுக் கென்னய்யா ஆச்சு. விஷயத்துக்கு வாய்யா என்கிறீர்களா இதோ வந்துவிட்டேன்)

என் ஐடியாவை உடனே செயல்படுத்த வேண்டும் என்ற ஆவலை அடக்கிக் கொண்டு மறுநாள்காலை வரை காத்திருந்தேன்.

மறுநாள் காலை 9-30 மணி.

அலுவலகம் செல்வதற்காக பஸ் ஸ்டாண்டில் நின்றிருந்தேன். மனதில் புதிய தெம்பு, நடையில் மிடுக்கு, முகத்தில் ஒரு கவர்ச்சி. (இவை இருப்பதாக நானே நினைத்துக்கொண்டேன்) பஸ் வந்தது. மூண்டியடித்து ஏறினேன்.

பொறு மனமே பொறு துடிப்பை அடக்கிக்கொண்டேன். நான் எதிர்பார்த்த நருணம் வந்துவிட்டது.

'சீட்டு வாங்காதவங்கள்ளாம் வாங்கிக்குங்க. எல்லாரும் சில்லரையாக் கொடுங்க. டிக்கட்ஸ் ... டிக்கட்ஸ்' கண்டக்டர் கூறிக் கொண்டே என்னை நெறுங்கினர். '25 பைசா டிக்கட் ஒண்ணு' என்று கூறி ஒரு 20 பைசாவை

யும், ஒரு சாக்லெட்டையும் கொடுத்தேன். (5 பைசாவிற்கு பதில் முதல் நாள் ஒரு பெட்டிக் கடைக்காரர் கொடுத்தது)

'இன்னம் 5 பைசா எடுங்க சார்' என்றார் கண்டக்டர்.

'அதுக்கு பதிலாகத்தானே சாக்லெட் தந்திருக்கேன்' என்றேன்

'என்னய்யா...வெளையாடறியா .. 5 பைசா எடுய்யா' என்ற கண்டக்டர் சாக்லெட்டைத் திருப்பித் தந்தார்.

பஸ்ஸில் இருந்தவர்கள் என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார்கள். நான் இதுதான் நேரம் என்று 'நேத்திக்கு 5 பைசாவுக்கு பதிலா பொட்டிக் கடையிலே கொடுத்த சாக்லெட் தாம்ப்பா இது. வெளையாட்டுக்குச் சொல்லலே வெச்சுக்கோ, டிக்கட் கொடு' என்று கூறிவிட்டு மற்றவர்களைப் பார்த்தேன்.

'சரிதான்... குணசீலம் கேஸெல்லாம் நம்ம பஸ்ஸுக்கு வந்திருச்சு' என்று முணு முணுத்த கண்டக்டர் 'மரியாதையா 5 பைசா கொடுங்க இல்லேன்னா 20 பைசா டிக்கட்தாரேன். அடுத்த ஸ்டேஜிலே எறங்கிக்குங்க. காலங் காத்தாலே கலாட்டா பண்ணுதீங்க' என்றார். பஸ்ஸில் ஒருவரும் உதவிக்கு வராததால் பேசாமல் 5 பைசா தந்துவிட்டு டிக்கெட்டைப் பெற்றுக் கொண்டேன்.

கண்டக்டர் தான் இப்படிச் செய்துவிட்டார் ..சரி... நேற்று சில்லறைக்கு பதிலாக சாக்லெட் கொடுத்த கடைக்காரர்நம்மைக் கைவிட மாட்டார் என்ற எண்ணத்துடன் மாலை ஆபீஸிலிருந்து அந்தக் கடைக்குச் சென்றேன்.

'பத்து பைசா வெத்திலே சீவல் கொடுப்பா' என்று சொல்லி ஒரு 5 பைசாவும், சாக்லெட்டையும் கொடுத்தேன்.' என்னசார் இது' என்றார் கடைக்காரர்.

'பத்து பைசா'

'இன்னும் அஞ்சு காசு வேணும் சார்'

'அதான் சாக்லெட் இருக்கே நேத்திக்கு அஞ்சு பைசாக்கு பதிலா நீ கொடுத்தது தானேப்பா!

'சில்லறை இல்லேங்கறதினாலே போனாப் போவுதுன்னு கொடுத்தா... அதையே திருப்பித்தரீங்களே. இனிமே சில்லறையை கொடுத்துட்டு சரக்கு வாங்குங்கள். இப்ப வெத்திலே வேணும்னா இன்னும் அஞ்சு காசு கொடுங்கள்' என்றார்.

என் மனக்கோட்டை இடிந்து தரை மட்டமாகியது - இல்லே, இல்லே - பூமி பிளந்து தரை மட்டத்திற்கும் கீழே போய்ப் புதைந்தது

இப்போதாவது என் ஐடியா புரிந்திருக்குமென்று நினைக்கிறேன் - இந்த ஐடியா செயல்பட்டால் நிச்சயம் நம் சில்லறைக் கஷ்டம் தீரும். எனவே நீங்கள் அனைவரும் ஒருமுகமாக அரசியல் தலைவர்கள், நிர்வாக அதிகாரிகள், கவர்னர்கள், ஜனாதிபதி, பிரதமர் ஆகிய அனைவருக்கும் விண்ணப்பங்கள் அனுப்ப வேண்டும் அதாவது சாக்லெட், மிட்டாய் வகையறாக்களை பைசாக்களுக்குப் பதிலாக Legal Tender ஆக உபயோகப்படுத்தலாம் என்று சட்டமியற்றச்சொல்லி வற்புறுத்த வேண்டும். (ஆர்டினன்ஸ் கொண்டு வந்தால் மிகவும் உபயோக இருக்கும்)

அப்படிச் செய்தால் சில்லரைப் பஞ்சம் தீருவதோடு மட்டுமல்ல. இன்னும் சில சில்லரைக் கஷ்டங்களும் தீரும் உதாரணமாக, உங்கள் குழந்தை 5 பைசா (உலோக) நாணயத்தை வாயில் போட்டுக்கொண்டுவிட்டது என்று வைத்துக்கொள்ளுங்கள். அது தொண்டையில் மாட்டிக்கொண்டால் அவஸ்தை, முழுங்கி வயிற்றில் போய்விட்டால் வைத்தியருக்கு பீஸ் இத்யாதி... இத்யாதி .. செலவினங்கள். இல்லையா ? புது (இனிப்பு) நாணயங்களை அமுலுக்குக் கொண்டுவந்துவிட்டால் ? குழந்தை 5 காசு விழுங்கிவிட்டால் சாக்லெட்டோ, பிஸ்கட்டோ ஒன்று நஷ்டம் டாக்டரிடம் போகவோ, கஷ்டப்படவோ தேவையில்லை. சரிதானே.

எனவே அன்பர்களே! எனது இந்த யோசனைக்கு ஆதரவு தருவீர்கள் என்று நம்புகிறேன்.

சாக்லெட், பிஸ்கட் வகைகளுக்கும் கட்டுப்பாடு வந்துவிட்டால் என்ன செய்வது என்று சில சந்தேகப் பேர்வழிகள் கூறுவது கேட்கிறது.

அவர்களுக்கு இதோ என் யோசனை, பேசாமல் சிகரெட் பெட்டிகள், கோலிக் குண்டுகள், குந்து மணிகள், புளியங்கொட்டைகள் போன்ற வற்றை உபயோகப்படுத்தலாம். எப்படி ?

இதற்கெல்லாம் கொஞ்ச காலம் பிடிக்கும். உடனடியாக ஏதாவது உருப்படியானயோசனை சொல் என்கிறீர்களா ?

இதோ... பேசாமல் எல்லாம் பொருட் களின் விலைகளையும் ரூபாய்க்கணக்கில் வைத்து விடவேண்டும். ரூபாய்க்குக் குறைந்த நாணயமே இருக்கத் தேவையில்லை. சரிதானே?

என்ன சார் இது. அப்ப ரூபாய்க்குப் பஞ்சம் வராதா என்கிறீர்களா ?

போங்க சார். இப்படிக் கேட்டுக் கொண்டேயிருந்தால், நான் பதில் சொல்லப் போவதில்லை... சார் !

# ஏகாந்தி

— ஞானவேலன் —

சிற்பியா னாலும் உன்னை
சிற்பமாய் வடிப்பேன் ; அந்த
பொற்சிலை அழகை யேனும்
பொழுதும் பார்த்திருப்பேன், நானோ
சிற்பியல் லாமல் போனேன் ;
சிலையாய் நீ பிறந்ததாலே ;
பொற்பூவே ! சிற்பம் மாலைப்
பொழுதுகண் டிரங்குமோ சொல்

கவிஞ(ன்) ஆனாலும் உன்மேல்
கவிதைகள் செய்வேன் ; அந்த
குவியலை யேனும் பாடி
கொள்ளுவேன் இன்பம் ; நானோ
கவிஞனல் லாமல் போனேன் ;
காவிய மானதால் நீ ;
புவிபுகழ் கவிதையாலே
புலனுக்கு மகிழ்ச்சி யுண்டோ !

 

# நற்பணி



ஈரோடு நகரின் பெரியார்கள் சிலர் ஆஸ்திகம், பக்தி, கலை பரப்பும் நோக்கத்தில், 'ஸ்ரீ ரெங்க பவனம் டிரஸ்ட்' என்றதொரு டிரஸ்டை சென்ற ஆண்டு மார்ச் மாதம் 13ந் தேதியன்று தொடங்கி இருக்கிறார்கள். நன்னெறிகளைப் பரப்புதல், குருகுல வகுப்புகள் நடத்துதல், இலவச மருத்துவ மனை நடத்துதல் போன்ற பல நல்ல பணிகள் இந்த டிரஸ்ட்டின் குறிக்கோள்கள். இவைகளை செவ்வனே நிறைவேற்ற டிரஸ்ட்டிற்கு ஒரு கட்டிடம் தேவைப்படுகிறது. இதனோடு ராமர் கோயில் ஒன்று கட்டும் திட்டமும் இருக்கிறது. இதற்குச் சுமார் ஆறு இலட்சங்கள் செலவாகும் என்று மதிப்பிடப்பட்டிருக்கிறது.

இது போன்ற நல்ல பணிகளுக்குத் தனது மனமுவந்த ஆதரவைத் தந்துவரும் சங்கீத கலாநிதி ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களால், நிதிவசூலின் பொருட்டு கடந்த ஆகஸ்ட் 31-ந் தேதியன்று ஒரு கச்சேரி நடத்தப்பட்டது.

உதவியளிக்க விழையும் நண்பர்கள்,

திரு. B. S. கிருஷ்ணமூர்த்தி அய்யர்
தலைவர்,
ஸ்ரீ ரெங்க பவனம் டிரஸ்ட்,
ஈரோடு—1.

என்ற முகவரிக்கு அனுப்பலாம்.

# சிந்தனைச் சுடர்கள்

கொடுமுடி ராஜாகோபாலன்

எந்த நாட்டையும் பாருங்கள்; அதன் வரலாற்றினை ஆராய்ந்து பாருங்கள்; வரலாற்றுக் காலத்தைப் பற்றிய அந்நாட்டின் கர்ண பரம்பரைக் கதைகளைக் கேட்டறியுங்கள். புனித வாழ்வை மாசு படுத்திவிடக் கூடாது என்றே அந்நாட்டின் சமயம் சொல்லி வருவதை அல்லது சமயங்கள் சொல்லி வந்திருப்பதை அறிவீர்கள்; உண்மையான சமயம், **இதைத் தான்** எந்த நாட்டிலும், எந்தத் தலைமுறையிலும் சொல்லி வந்திருக்கிறது. பக்குவமற்ற நிலையிலுங்கூட, சமயம் மனித சமுதாய நலத்திற்காக இப்பணியையே செய்து வந்திருக்கிறது செய்து வருகிறது. மனித வாழ்வில், **மீறப்படாத ஏதோ ஒன்று** இருக்கின்றது என்ற பிரக்ஞைக்குத் தொடர்ந்தாற்போல உயிரூட்டி வருவது சமயமேயாகும்.

பெரும் படையெடுப்புகளின் வரலாறுகளிலே நெஞ்சையள்ளுகின்ற எத்தனையோ நிகழ்ச்சிகளைப் படிக்கிறோம். 1965ம் ஆண்டு ஆகஸ்டு 5ந்தேதியன்று மதவெறியும்-சர்வாதிகார வெறியும் கொண்ட **பாகிஸ்தான்**, பெரும் எண்ணிக்கையில் ஊடுறுவல்காரர்களை காஷ்மீர் பிரதேசத்திற்குள் அனுப்பி இதன்மூலம் இந்தியாவின் மீது படையெடுத்தது. இந்தியாவின் பல நகரங்களின் மீது பயங்கரமாகக் குண்டுமாரி பொழிந்தது தொழுகை ஸ்தலங்கள் என்றோ, ஆஸ்பத்திரிகள் என்றோ பாகிஸ்தான் வெறியர்கள் பாகுபாடு செய்யவில்லை! நோயாளிகளையும் குண்டு போட்டுக் கொன்றார்கள்; குழந்தைகளையும் கொன்றார்கள். எந்த அசுரப் பேயாட்டங்களைக் கண்டு நம் மக்களோ அல்லது வீர சிப்பாய்களோ சிறிதுகூட கலவரங் கொள்ளவில்லை. மக்கள் தங்கள் மாமூலான வாழ்க்கையை நடத்திக் கொண்டிருந்தனர்; வீர சிப்பாய்களும் விமானப் படையும் எதிரிகளின் ராணுவ பலத்தை-தாக்கும் சக்தியை குலைத்து விட்டார்கள். இஸ்லாமிய நாடான பாகிஸ்தான்பால், சமய உணர்வு அடிப்படையில் இந்திய முஸ்லீம்கள் அனுதாபம் காட்டுவார்கள். தாங்கள் வாழும் நாட்டிற்கு எதிராகக் கலகம் செய்வார்கள்; அல்லது துரோகம் செய்வார்கள் என்று எண்ணி, இந்திய மண்ணில் படையெடுத்து வந்த பாகிஸ்தானின் வெறிச் செயல்களை எதிர்த்து உயிர்த் தியாகம் செய்தவர்களிலே பலபேர்கள் பாரதப் புதல்வர்களான முஸ்லீம்களாவார்கள்!

தங்கள் வீடுகள்-நகைநாட்டுகளைப் பற்றிக் கவலை கொள்ளாது, அவற்றையெல்லாம் துறந்துங்கூட மிகச் சிறிய நாட்டின் மக்கள், தங்கள் ஆலயங்களும் - அவற்றில் கோயில் கொண்டிருந்த விக்கிரகங்களும் அழிந்துவிடக் கூடாது என்பதற்காக, கடைசி வரையில் போரிட்டிருந்திருக்கிறது பல உருக்கமான காட்சிகளை வரலாறுகளில் படிக்கிறோம். அவர்களது மேன்மையான பக்திப் பரவசத்தை நாம் எவ்வாறு மறக்க முடியும்?

எந்த நாகரிகத்தாலும் இந்த உள்ளச் சிறப்பினை இழந்து விட்டு, நீண்ட நாட்கள் வாழ முடியாது! பக்திப் பரவசம் என்பது மனோ நிலையில் தான் தோன்ற முடியும். இந்த உள்ள உறுதிப்பாடு குலைந்துவிடும் நிலையில் தான், நாம் பூரணமாக அழிந்துவிடுகிறோம். இந்த உறுதிப்பாடு, அதன், மிக உன்னத நிலையில் வெளிக்கிளம்பும் போது வாழ்வும் வான் சிறப்பை எய்துகிறது.

'நாம் அனைவரும் கடவுளின் குழந்தைகள் நாம் அத்துணை பேர்களும் அவனுடைய சொரூபத்துடன், அவனுடைய பணிகளையே செய்கிறோம்; நம்முடைய உள்ளங்கள் எல்லாம் அவனுடைய அருளாலயங்கள் தாம்; மனித சொரூபமாகிய உள்ளக் கோயில் எந்த நாளும் புனிதமாகவே இருக்கின்றது; அச்சொரூப விசேஷங்கள் வல்லமைகள் யாவுமே புனிதமானவைதாம்; இவ்வாறு முழங்குகின்ற

உண்மையான சமயத்தின் நற்செய்தியை நல்லவர் எவரும் ஏற்றுக் கொள்ளவே செய்வார்!

'மனிதனுடைய தீரச் செயல்களையும், இழிந்த நிலைகளையும் ஓயாது கண்டனம் செய்கின்ற சமயம், அவனை இழிவுபடுத்தவே செய்கிறது; அவனது உள்ளத்திலே அவநம்பிக்கையை விதைக்கிறது' இவ்வாறு சமயத்தைக் கண்டிக்கிறவர்கள் கூறுவதையும் நாம் கேட்கிறோம்!

ஒன்றின் உயரிய மதிப்பைப் பாராட்டத் தொடங்கும் போதுதான், அது கெட்டு விடக்கூடாதே என்ற கவலையும் ஏற்படுகிறது; புல்லாங் குழலின் மதிப்பை அறியாத வேலையாள் ஒருவன், அதைக் கழியாக உபயோகித்தானும் கம்பளங்களின் மீது படிந்திருந்த தூசிகளை அகற்ற, அதைக் கொண்டு அவற்றைத் தட்ட ஆரம்பித்தானும்! வேலையாளுக்கு அவனுடைய செயலில் சிறிது கூட அதிருப்தி ஏற்படவில்லை ஆனல், எஜமானனுக்கு அவனுடைய செய்கை மிகுந்த கோபத்தை மூட்டியது; எனெனில், குழலின் பெருமை அவனுக்குத்தானே தெரியும் ஆகையால், மனித சொரூபச் சிறப்பு பிரதிபலிக்கின்ற கருத்தினை மிக உயர்வாக மதிக்கின்ற சமயம், அதே காரணத்திற்காகவே தீய எண்ணங்கள் - செயல்களையெல்லாம் எதிர்க்கின்றது; அவற்றை எதிர்த்து வெகுண்டு எழுகிறது; மனிதனை, மனிதனை, சமயம் உயர்வாக மதிக்கின்றது; அந்த நிலையில். மனிதனிடம் தென்படுகின்ற கொடுமைப் போக்குகளை அதனுல் எவ்வாறு எதிர்க்காமல் இருக்கமுடியும்?

சமயத்தை, ஒதுக்கித்தள்ள வேண்டிய ஓர் அற்ப விஷயமாகச் சிலர் எண்ணுகிறார்கள்; ஆன்மிக மூலம் — அர்த்தம் சிறப்பு ஆகியவையற்ற ஒரு மூடநம்பிக்கையே சமயம் என்பாரும் உள்ளனர் ;இக் கூற்றினுல். மனித சமுதாயத்தில் மேலானது; அழகானது; போற்றத்தக்கது. பக்திபூணத்தக்கது என்று சொல்லுவதற்கு ஒன்றுமே கிடையாது என்று ஆகிவிடும்! மனித நலவாழ்விற்காக எது முக்கியமானதோ அதற்காகச் சமயம் இடையருது போரடிக் கொண்டிருக்கின்றது என்பதையும், மாசுபடுத்த முடியாத அல்லது கூடாத ஒரு சக்தியினுலன்றி மனித வாழ்வு சாரமுள்ளதாக இருக்க முடியாது என்பதையும், இந்தச் சாறமுள்ள வாழ்வினை நிலைநிறுத்தவே சமயம் பாடுபடுகின்றது என்பதையும், இவர்களும் அறிந்துகொள்ளுகின்ற காலம் தூரத்தில் இல்லை

(தொடரும்)

# காமராஜருடன் ஒரு நாள்

—கோவை அ. அய்யாமுத்து

சற்றேறக் குறைய 40 ஆண்டுகட்கு முன் ஒரு நாள்.

அப்போது நான் தமிழ்நாடு கதரியக்கத்தின் தலைமைத் தொண்டனாக இருந்தேன்.

திருச்செங்கோட்டையடுத்த புதுப்பாளையம் காந்தி ஆசிரமத்தில் இராஜாஜி அவர்கள் குடியேறி இருந்தார்.

அவரைச் சூழ்ந்து க. சந்தானம் மதுரை நாராயணன் போன்ற பல சகாக்கள் இருந்தனர்.

50 ஆண்டுகட்கு முன் காந்தி ஆசிரம ஸ்தாபித காலத்தில் அங்கு சென்றிருந்து முகூர்த்தக் கால் நாட்டியவர்களில் நான் ஒருவன். ஆதலால் அதன் வளர்ச்சியில் எனக்கு மெத்த அக்கரையுண்டு. எனவே மாதம் ஒரு நாள் அங்கு போவதை வழக்கமாகக் கொண்டிருந்தேன்

இந்தக் கதர்ப் பீசைப் பாருங்கள் எவ்வளவு நேர்த்தியாக இருக்கிறது என்று சொல்லிக் கொண்டே ராஜாஜி அவர்கள் ஒரு வெண்மையாக வெளுக்கப்பட்டிருந்த ஒரு பத்து கெஜம் பீசை என் கையில் கொடுத்தார்.

அதை வாங்கிப் பார்த்ததும் விஷயம் புரிந்தது. பீசின் ஒரு பக்கத்தில் நேர் நேராக இரண்டு விரல் அகலத்தில் ஒரு சாண் நீளத்தில் கிழித்தேன். ஊடு நூலைப் பிரித்துக் களைந்து விட்டுப் பாவு நூலைச் சுருக்கமின்றி நீவி நீட்டி ராஜாஜியிடம் காட்டி, இதோ பாருங்கள் இது 40 நெம்பர் மில் நூல்.. ...என்றேன்.

விருதுநகரிலிருந்து வந்ததாக அறிந்தேன்.

மறுநாள் அந்தப் பீசுடன் விருதுநகர் கதர் உற்பத்தி சாலையுள் நுழைந்தேன்.

வஸ்திராலய நிர்வாகி சங்கரலிங்க நாடார் ஒரு கரியடுப்பில் சமைத்துக் கொண்டிருந்தார்.

நான் எடுத்துச் சென்றிருந்த கதர்த் துணியை அவரிடம் காட்டி அதை நெசவு செய்த தறிகாரனைப் பார்க்க வேண்டுமென்று சொன்னேன்.

காமராசர் ஊரிலிருந்தால் அவரை அழைத்து வருமாறு சொன்னேன்.

சிறிது நேரத்தில் காமராசர் வஸ்திராலயம் வந்து சேர்ந்தார்.

நெசவுகாரன் கிராமத்துக்குச் செல்ல ஒரு குதிரை வண்டியைக் கூப்பிடுமாறு சங்கரலிங்க நாடாரிடம் தெரிவித்தேன்.

கிராமம் வெகு சமீபத்தில்தான் இருக்கிறது. வண்டியொன்றும் தேவையில்லை. கால்நடையாகவே போய் வந்து விடலாமென்று அவர் சொன்னார்.

காமராசர் யாதொன்றும் மறுத்துக் கூறாததால், நாங்கள் மூவரும் கால்நடையாகவே புறப்பட்டோம்.

ரயில்வே லைனைக் கடந்து செல்லச் செல்ல ஊரைக் காணவில்லை. எனக்கு ஆஸ்துமா. மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்குகிறது. சுமார் மூன்று மைல் தூரம் நடந்து சென்று தறிகாரன் வீட்டுக்குள் நுழைந்தோம்.

இரண்டு தறிகள் பூட்டப்பட்டிருந்தன. இரண்டிலும் 40 நெம்பர் மில் நூல் பாவுகள் இணைக்கப்பட்டிருந்தன. ஒன்றில் ஊடும் பாவும் மில் நூல். மற்றொன்றில் ஊடுக்கு மட்டும் கதர் நூல்

என்னப்பா இப்படிச் செய்கிறுயே என்று நெசவாளியைக் கேட்டேன். மானேஜர் ஐயா ஆட்சேபிக்கவில்லே. ஆதலால் என் மீது குற்ற மில்லே என்ருன் அவன்.

என்ன தறிகாரன் சொல்வது சரிதானு வென்று காமராசர் சங்கரலிங்கத்தைக் கேட்டார்.

பாவும் ஊடும் இரண்டும் கதராய்த்தான் இருக்குமென்று நான் நினைத்தேன் என்ருர் அவர்.

அன்று மில் நூல் சிட்டம் ஒன்று நான்கு பைசா. கதர் நூல் சிட்டம் ஒன்று ஒரு அணு. தறிகாரனுக்கு நல்ல கொள்ளை.

தறிகாரன் வசமிருந்த கதர் நூலனைத்தையும் எடுத்துக் கொண்டு, விருதுநகர் வஸ்திராலயம் சேர்ந்து தறிகாரன் கணக்கு முடிக்கச் செய்தேன்

காமராசருடன் கலந்து சங்கரலிங்கத்தை வஸ்திராலயப் பொறுப்பிலிருந்து நீக்கி ரத்தினசாமி என்ற வாலிபரைப் பொறுப்பாக்கி, இருப்புத் தணிக்கை செய்து, அவரிடம் ஒப்புவித்து விட்டு, சங்கரலிங்கத்தை ராஜபாளையம் உற்பத்திசாலேக்கு உதவியாளராகப் போகும்படி உத்திரவு எழுதிக் கொடுத்தேன்.

அன்று பகல் விருதுநகரில் ஒரு செல்வந்தர் வீட்டுக் கலியாணம் காமராசர் என்னையும் அழைத்தார். சங்கரலிங்கமும் உடன் வந்தார்.

நாளொன்று ஒன்றே காலணு செலவில் அதாவது அடுப்புக்கரி காலணு, அரிசி அரையணு, பருப்பு காலணு, காய்கறி காலணு — ஆக மொத்தம் ஒன்றே காலணுச் செலவில் சமைத்து மூன்று வேளேயும் சாப்பிட்டிருந்த சங்கரலிங்கம், கலியாண வீட்டில் அளவு கடந்து சாப்பிட்டு, எழுந்திருக்க முடியாமல் அங்கேயே படுத்துக் கொண்டார்.

சங்கரலிங்க நாடார் பிற்காலத்தில் சென்னை மாகாணத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் வைக்குமாறு கூறிப் பட்டினி கிடந்து மடிந்தவர். அவரது கதையை யாராவது எழுதினுல் அற்புதமாக இருக்கும்.

அன்று மாலே ரயிலடிவரைக்கும் வந்து காமராசர் என்னிடம் விடைபெற்றுக் கொண்டார்.

இன்று காமராசர் மறைந்து பத்து நாட்களாகின்றன. அவரது பிரிவை எண்ணி யெண்ணி ஏங்காதவர் எவருமில்லே. இன்று திருலோகசீதாராம் உயிரோடு வாழ்ந்திருந்தால் காமராசரின் பிரிவைத் தாங்கொணுது சவமாய்க் கிடப்பார்.

வாழ்க ! காமராசரின் நாமம் !

• • •

# அம்மன் சகோதரிகள்!

ப. தனுஷ்கோடி

ஊமையம்பட்டி கவிஞர். ந கந்தசாமி அவர்கள் பழம் பெரும் தேசபக்தர், சிறை சென்ற தியாகி. ''விடுதலை வேட்கை'' என்ற கவிதை நூலுக்காக, நாமக்கல் கவிஞரின் பாராட்டுதலைப் பெற்றவர். நூறுண்டுகளுக்கு முற்பட்ட புலவர்களைப்பற்றி ஆராய்ந்து வருபவர். அதற்காக முதுமையையும் பொருட்படுத்தாமல் கிராமம் கிராமமாகச் சென்று ஓலைச் சுவடிகளையும், வரலாறுகளையும் சேகரிக்கிறார். அவரது இலக்கிய ஆர்வம் வியக்கத்தக்கது. அவருடன் பேசுவதே தனி இன்பம் ரஸமான விஷயங்களைச் சுவைபடக் கூறுவார், இரண்டு மூன்று தலைமுறைகளுக்கு முன்பு வாழ்ந்த மாம்பழக் கவிஞரைப்பற்றி ஒரு நாள் கூறிக் கொண்டு இருந்தார்

அத்தனூர் ஒரு சிறிய கிராமம் கீழ்த்திசையில் அடிவானம் வரை தெரியும். ஆனால் மேற்றிசையிலோ ஊரை ஒட்டினாற்போல உயர்ந்த மலை. அதனால் உச்சிப் பொழுது தாண்டியதும், கதிரவன் ஒளி படராமல் நிழல் படிந்து விடும். வெப்பக் காற்று என்றுமே வீசாது. குளுமையாக இருக்கும். ஆகவே ஏரி, குளம், தடாகங்கள் எல்லாம் எப்போதுமே நீர் நிரம்பி இருக்கும். பசுமையான வயல்கள்; பலவித பூச்சொரியும் செடிகள்: இனிய சுவை தரும் பழ மரங்கள்; இலைகள் அடர்ந்த நெருக்கமான உயர்ந்த விருட்சங்கள்; தென்னை, கமுகு போன்ற கிளைகளற்ற மரங்கள்; தாமரை, அல்லி மலர்கள் நிறைந்த தடாகங்கள்! பொதுவில் செழிப்பு மிக்க அழகிய கிராமம் அது. அமைதியான சுக வாசஸ்தலம்!

அங்கே ஒரு அம்மன் கோயில், சுற்றிலும் விசாலமான மைதானம். அம்மனின் சக்தி பெரியது. வருடமுழுவதும் மக்கள் வந்து பொங்கலிட்டு, வணங்கிச் செல்வர். தேர்த்திருவிழாவும் உண்டு அப்போது கூடும் மக்கள் எண்ணிலடங்கா. ஆலயத்தைச் சுற்றிக் கரி பிடித்த கல் லடுப்புகள், காலங்காலமாக இருப்பவை. அம்மனின் அருளுக்குச் சாட்சி சொல்பவை அங்கே மாம்பழக் கவிஞர் வருகிறார். ஒரு கல் மேடையில் அமர்ந்து வானத்தையும் இயற்கைக் காட்சிகளையும் காணுகிறார். கற்பனையும், கவிதையும் சிறகடித்துப் பறக்கிறது. எப்படி-?

சூல் கொண்ட மேகங்கள்; உருண்டு திரண்டு இருண்டு தவழ்கின்றன. தாளம் தவறாது இடியின் ஓசையும் இடையிடையே கேட்கின்றன. இனிய தென்றல் வேறு, நீர் நிலைகளின் அருகே உறங்கும் வண்ணமயில்கள் சும்மா இருக்குமா? தன் அழகிய சிறகை வட்ட வடிவமாக விரித்து நடனமாடத் துவங்குகிறதாம். வண்டினங்கள் ரீங்கார இசை கூட்ட, வான ஒலி தாளம் அமைக்க, கலாப மயிலின் ஆனந்த நடனம் அமர்க்களமாக நடக்கிறதாம். ஆட்டம் இருந்து விட்டால் மட்டும் போதுமா? ஆடுபவருக்கு ஏதேனும் பரிசளிக்க வேண்டுமல்லவா? ஓ! உண்டே! ஆட்டத்தைப் பார்த்து மயங்கிய சோலைகள் எல்லாம் தேன் கனிகளைப் பரிசிலாகச் சொறிகிறதாம்! இத்தகைய அரிய அற்புதமான காட்சியைக் கவிஞர் மட்டுமா பார்க்கிறார்? இல்லை. அங்கே தலைவியாகக் குடி கொண்டிருக்கும் அம்மனும் அல்லவா விழி இமைக்காது பார்க்கிறாளாம்! ஆம்; அத்தனையும் ஆட்டுவிக்கும் அம்பிகையும் அவளே! கண்டு ரஸித்து மகிழ்பவளும் அவளே!

—சரி; பாடலையே பார்த்து விடுவோமே!

மலர் வாவி தோய்ந்துவரு மகுடகோடி மழை
மாமுகிலெனக் குறித்து
மரகதக் கலாபமயில் பரதநடனமே புரிய
மருவுலவு சோலைகளெலாம்

விலகாது தேன்கனி வியந்துதவ குவளைகண்
விழி இமைக்காது நோக்கும்
மலைமாது வளமைதிகழ் அத்தனூர் அம்பிகை தன்
மலர்ப்பதம் சிந்தை வைப்பாம் ......
(மாம்பழக் கவிஞர்)

நெடிய பாடலாம். இவ்வளவு சொல்லி விட்டு, ஊமையம்பட்டி கவிஞர் ஊமையாய் விட்டார். என் சிந்தனை சுழன்றது. ஏனெனில் எங்கள் ஊருக்கு ஆறு மைல் தூரத்தில் இருக்கிறது அத்தனூர். அதற்கு இவ்வளவு சிறப்பா? அம்மனுக்கு இவ்வளவு பெருமையா? ஏதோ ஒரு பட்டிக்காடு என்றல்லவா இது வரை இருந்து விட்டேன். நூற்றுக்கணக்கில் அந்த வழியாக சேலம் போய் வந்திருக்கிறேன். அம்மன் கோயிலைத் தாண்டும் இடத்தில், பஸ் பிரயாணிகள் சிலர் அவ்வப் போது அம்மனை நோக்கிக் கும்பிடு போடுவதையும் கண்டிருக்கிறேன். தெரியவில்லையே அதன் மகிமை! அருகில் இருப்பதாலா? ஏனோ தெரியவில்லை!

தவறு. தவறு. தவறு. நான் நினைத்துப் பார்க்கிறேன். நான் உயிருடன் இன்று இருப்பதே அந்த அத்தனூர் அம்மன் அருளால் தான். பாவி! நன்றிக் கடனைக் கூட மறந்து விட்டேனே? அன்னையானதால் பொறுமை காட்டுகின்றாளோ? என்ன இருந்தாலும் தெய்வம் கருணை உள்ளது தான் வைதாரையும் வாழவைப்பதல்லவா! சொல்லப் போனால் என் மறதிக்குக் காரணமும் உண்டு. விவரம் அறியாப் பருவத்தில் நடந்ததல்லவா அது! அம்பிகை அறியமாட்டாளா?

அப்போது எனக்குப் பத்து வயது கூட நிரம்பி இராது. எனது தந்தையாருடன் சிறிய மோட்டார்க் காரில் சேலமிருந்து வந்து கொண்டிருந்தோம். சிறிய கார் என்றால் அவ்வளவு சிறியகார்! குலுங்கிக் குலுக்கி வந்து கொண்டிருந்தது தவளை மாதிரி எகிறி, எகிறிக் குதித்தது. குண்டும் குழியுமான குறுகலான பாதை. இப்போது மாதிரி வழவழப்பான நெடுஞ்சாலை கிடையாது. முன்னிரவு நேரம் அம்மன் கோயிலுக்கு முன்னால் சிறிய கணவாய். இரு புறமும் மலைகள் சூழ்ந்தது. உயர்ந்து தாழ்ந்த பகுதி மறு புறம் என்ன வண்டி வருகிறதென்று தெரியாது. கணவாய்த் திருப்பத்தில் திரும்பிய கார் நொடி நேரத்தில் கோவிலின் பக்க மாகக் குப்புறக் கவிழ்ந்து விட்டது. கவிழ்ந்து உருண்டது. உருண்டு, உருண்டு மண்வயலில் போய் நின்றது. சிரித்து மகிழ்ந்து பேசிக் கொண்டு வந்த நாங்கள் ''குய்யோ! முறையோ'' என்று கூக்குரலிட்டோம் "அப்பா! அப்பா! அண்ணா! அண்ணா!'' என்று நான் கத்தினேன். என் முதுகின் மீது காரின் இரும்புச் சட்டங்கள் அமுக்கி கொண்டு இருந்தன தரைக்கும் முகத்துக்கும் நாலு விரல் உயரம்தான் இருக்கும். அதற்கு மேல் தலையை உயர்த்த முடியவில்லை. இடித்தது. கீழேயுள்ள செம்மண் புழுதி வாயிலும், மூக்கிலும் புகுந்து திணர அடித்தன. ''தூ! தூ!'' என்று துப்ப, துப்ப. மீண்டும மீண்டும் அதே மண்ணைக் கவ்வவேண்டியதாயிற்று. கண்கள் மூடியிருக்கிறதா, திறந்திருக்குறதா என்பதே தெரியவில்லை. அவ்வளவும் ஒரே இருட்டு. காதுகள் கேட்டாலும் அடை போல மண் அப்பியிருந்தது

ஒரு கைதான் ஈரமண்ணைத் துழாவியபடி தவழ்ந்து வெளியேற முயன்றது இன்னொருகை தோல் பட்டையுடன் துண்டிக்கப்பட்டு விட்டதாகவே உணர்ந்தேன். இடுப்புவரையில் தான் உடல் இருப்பதாகத் தெரிந்தது அதற்கும் கீழே உள்ள இரண்டு கால்களையும் அடியோடு காணோம்! இவ்வளவுக்கும் உடலின் எந்தத் பாகத்திலும் இரத்தம் வடிவதாகவோ, வலி எடுப்பதாகவோ தெரியவில்லை. பெரிய காயமோ சிறிய காயமோ உள்ள எரிச்சல் இல்லை.

நான் உயிருடன் நன்றாகத்தானிருக்கிறேனா? எனக்கே புரியவில்லை. மூச்சுவிட முடிந்தது. அதுவே போதும் ''பயப்படாதே! பயப்படாதே!'' என்று அப்பா கத்தும் குரல் கேட்டது. பதிலுக்கு நான் குரல் கொடுத்தேன். ஒருவருக் கொருவர் உயிருடன் இருப்பதாகத் தெரிந்து கொள்வதே தைரியமளித்தது ஆனால் அன்பு அப்பா-அருமை அப்பா, என்னைக் கைப் பிடித்துக் காப்பாற்ற முற்படவில்லையே, ஏன்? அவரும் மீளமுடியாமல் காரின் அடியில் சிக்கிக் கொண்டிருப்பாரா? ஆமாம்; அவரும் என்கூடக் காரில் தானே வந்தார். ஐயோ கடவுளே!

கார் டிரைவர் கோபால் சிங் சிவப்பாக, குண்டா இருப்பார். என் தந்தையின் நண்பர். எப்போதும் என்னிடம் பிரியமாக இருப்பார் பேசுவார். அவராவது தப்பியிருக்கக் கூடாதா? அவருமல்லவா என்னை அடிக்கொரு தரம் கூப்பிட்டு, ''கவலைப் படாதே! தைரியமா இரு!'' என்றார் அவருக்கும் என்ன வந்தது! காரில் அப்பாவுக்குத் தெரிந்த இன்னொருவரும் இருந்தார். அவர் என்னவானார்? பேச்சு மூச்சே காணோமே!

அந்தக் காலத்தில் இந்த மாதிரி இவ்வளவு அதிகமாக பஸ்களோ, லாரிகளோ போக்குவரத்து கிடையாது. ஆகவே வெகுநேரம் வரையில் நாங்கள் மூவரும் கதறிக் கதறி கண்ணீர் விட்டு ஓய்ந்து விட்டோம். அதன் பிறகுதான் தெரிந்தது. காரில் எங்களுடன் வந்த இன்னொருவர் எப்படியோ நெம்பி-நெண்டி-வளைத்து-இழுத்து வெளியே தப்பித்துக் கொண்டு விட்டார். எங்களைக் காப்பாற்ற உதவி தேடி அத்தனூருக்குள் சென்றிருக்கிறார் அக்கம் பக்கம் யாருமே இல்லை என்றால் என்ன செய்வது? அங்கிருந்து விவசாயிகளும், குடி மக்களும் வந்து காரைத் தூக்கி எங்களை விடுவித்தனர் சிறிய காராய் இருந்ததினாலும், அருகில் அம்மன் அருள் இருந்ததினாலும், எல்லோரும் உயிர் பிழைத்ததாகக் கூறினார்கள் பிறகு எப்படியோ மாட்டு வண்டியில் ஏற்றி, நள்ளிரவில் எங்கள் வீடு கொணர்ந்து சேர்ந்தார்கள். அப்போது என் நெற்றியின் நடுமையம் உச்சியில்-நேர்வகிடு ஆரம்பத்தில் சொருகி இருந்த இரண்டங்குல ஆணியைக் கொரடினால் பிடித்து இழுத்து எடுத்தார்கள். வலியான வலி! உயிர் போய் உயிர் வந்தது அந்த வடு இன்றும் மறையவே இல்லை. அப்படியிருந்தும் இப்போதுதான் வேளை வந்தது. இறையருள் எப்படியெல்லாமோ நினைவும் படுத்துகிறது! ஆச்சரியம் தான்!

சுமார் நாற்பது ஆண்டுகளுக்குப் பின் இப்போது போய் இருந்தேன். அதே கோயில்! அதே அம்மன்! அதே விசாலமான மைதானம் அப்படியே இருந்தது. அமைதி தவழும் இடம். பெரிய கோயில்களிலுள்ள நெரிசல் இல்லை விருப்பம் போல் தரிசிக்கலாம். மனமுருகப் பாடலாம் மவுனமாக அமர்ந்து பிரார்த்தனை செய்யலாம். அம்மனின் அருள் தாராளமாகக் கிடைக்கும் நாளுக்கு நாள் அம்மனின் புகழ் பரவி வருவதாகச் சொன்னார்கள். பக்தர்கள் வேண்டியபடி கிடைக்கிறதாம். செல்வாக்கு கொடி கட்டிப் பறக்கிறது!

எவ்வளவு இருந்து என்ன பயன்? அம்மனுக்குக் குழந்தைப் பேறு இல்லை. குறையிருக்காதா? தனிமரம். குறை தீர வழி இல்லை. தெற்கே ஐந்து மைல் தொலைவில் அலைவாய் மலை அடிவாரத்தில் தங்கை கோயில் கொண்டிருக்கிறாள் அவளுக்குக் குழந்தைகளுண்டு. ஒன்றா, இரண்டா? பதினாறும் பெற்றுப் பெரும் பேறு பெற்றவள்! பாக்கிய சாலி! போய்ப் பார்க்க வேண்டும்; கொஞ்சி மகிழ வேண்டும்; ஆசை தீர முத்தமிட்டு விளையாட வேண்டும். நெடு நாள் கனவு! நேரம் தான் கிடைக்கவில்லை ஊர்க்காவலும், ஓயாத பக்தர்களின் கூட்டமும்! நினைத்து நினைத்து உருகினாள். பதினாறு பிள்ளைகள் பெற்ற பின்பும், போய்ப் பாராமலிருப்பது சரியல்ல. அக்கால வழக்கப் படி முறுக்கு, சீடை, அப்பம், தேங்குழல் என்று பலவகைப் பலகாரங்கள் செய்து எடுத்துக் கொண்டு பயணப் படுகிறாளாம்!

மூத்தவளைத் தரிசித்த கையோடு. இளையவளையும் தரிசிப்பது புண்ணியமல்லவா? என்னையும் போகச் சொன்னார்கள் போனேன் அங்கே—!

அருகில் தானிருக்கிறது அலைவாய்மலை. இராசிபுரத்துக்குக் கிழக்கே உள்ள கொல்லி மலையை அளந்து, அளந்து, இராசிபுரத்துக்கு மேற்கே அலைவாய் மலையாகக் கொட்டினார்களாம். அலைவாய்மலை ஏற்பட்ட கதையைக் கூறினார்கள். தவம் இயற்றும் சித்தர்கள் வாழ்ந்த இடம் சித்தர் பெயராலேயே சிறு ஆலயம் ஒன்றும் மலைமேலே உள்ளது. அருகில் என்றும் வற்றாத சில்லென்ற அருவி! சிறு நீர் வீழ்ச்சியாகக் கொட்டிக் கொண்டே இருக்கிறது, இரவு பகல் ஓய்வே இல்லாமல்! இன்னும் சற்று மேலே சென்றால்; மழை காலங்களில் உயரமான பாறைகள் மேலிருந்தும் சோவென பெரிய நீர் வீழ்ச்சி கொட்டும்! பற்பல மூலிகை வேர்களின் படிமத்தில் ஊறிப்

பாய்ந் தோடி வருவதால் நோய், நொடி தீரும் என்பர்! அந்நீரில் மூழ்கிக் குளித்து எழுந்து, மலைக்காற்றை சுவாசித்தால் களைப்பு தீர்ந்து, உடல் ஆரோக்கியமாக மாறுவது என்னவோ இன்றும் கண்கூடாகக் காணும் உண்மை! ஆகவே அருகில் உள்ள எல்லோருமே ஓய்வெடுத்துக் கொள்ள, மலிவான உல்லாசப் பயணமாக அங்குவந்து போகிறுர்கள். குற்ருலம் கெட்டது போங்கள்!

அதன் அடிவாரத்திலிருந்து பிரிகிறது மூன்று, நான்கு நீரோடைகள் மழைக் காலங்களில் காட்டாறுகளாக வெள்ளம் கரை புரண்டு ஓடும்! மற்ற நாட்களில் பாதம் நனையத் தவழும்! அவற்றின் மத்தியில் ஒரு பெரிய திடல். தீவு எனலாம்! இலங்கை என்ருல் சுற்றிலும் நீர் சூழ்ந்த தீவு தானே? அது தீயினல் பொசுங்க வில்லை. இந்தத் தீவிலுள்ள அம்மன் தண்ணீரால் அழியவில்லை ஆம்; சுற்றிலும் எவ்வளவு நீர் பெருக்கெடுத்தாலும் ஆலயம் மட்டும் அழியவில்லையாம்! ஆகையால் ''அழியா இலங்கை அம்மன் கோயில்'' என்று புலவர்களின் இலக்கியங்களிலே பெயர் பெற்றது. அம்மன் பேரில் ஓர் நீண்ட அந்தாதியே கூட ஒரு புலவர் பாடி இருக்கிருராம். விசாலமான கற்கோவில்! சுற்றிலும் பரந்த மைதானம்! ஆங்காங்கே பக்தர்கள் பொங்கலிட்ட அடையாளமாக, ஏருளமான கல் அடுப்புகள்! அத்தி ஆல், இச்சி போன்ற அடர்ந்த மரங்களின் குளிர்ந்த நிழல்! அவற்றில் மறைந்திருந்து கூவும் குயில்கள்! பேசும் மைனக்கள்! தத்தும் கிளிகள்! வாலாட்டும் கருங்குருவிகளும், புருக்களும் ஏராளம்! ஏராளம்! நூறு, ஐநூறு, ஆயிரம் என்று பாமர மக்கள் பக்தியோடு வந்த வண்ணம் இருப்பார்கள்!

இந்த அம்மனுக்குத்தான் பதினுறு குழந்தைகள்! இந்த இளைய அம்மனுக்கும் சக்தியுண்டு; சக்தி அழைப்பு உண்டு ஆண்டு தோறும் திருவிழா உண்டு; பல்லாயிரக் கணக்கில் மக்கள் கூடுவதுண்டு. சுற்று வட்டார விவசாயிகள் அனைவரும் தங்கள் விளைபொருட்களைக் காணிக்கை ஆக்குவர்! கோயில் மண்டபத்திலே காய், கறிகள், தானியக் கதிர்கள்

கட்டி தொங்க விட்டிருப்பர்! நூற்றுக் கணக்கிலே வாழைப்பழச் சீப்புகள் தூக்கிலே தொங்குவது கண் கொள்ளாக் காட்சி! சுரக்காய், புடலங்காய், பீர்க்கங்காய் எதுவும் பாக்கி இராது. ஆன முதலுண்டு; அன்னே அருள் உண்டு; மாரி பொழிவதுண்டு; மக்கள் மகிழ்வதுண்டு! அம்மண் அருள் பெற்றவள்! வேண்டிய வேண்டியாங்கு வரம் அருள்பவள்! வாரி வழங்குபவள்!

அழியா இலங்கை அம்மனுக்கு, தன் அக்காள் அத்தனூர் அம்மன் புறப்பட்டு வருவது தெரிந்தது. சக்தியின் லீலையை யார் அறிவர்? அது தேவ ரகசியமன்ருே? ஏனே அரூபயை ஏற்பட்டதாம்! முதல் குழந்தை பெற்ற போதெல்லாம் வந்து சீராட்டாத சகோதரி, இப்போது ஏன் வருகிருள்? பதினறு பிள்ளைகள் பெற்ற பின் தான் தடம் தெரிகின்றதா? இதில் ஏதோ சூது இருக்க வேண்டும்! இல்லா விட்டால் இத்தனை காலமாக இல்லாத தரிசனம் இப்போது மட்டும் வருவானேன்? சிந்திக்க, சிந்திக்க இளைய அம்மனின் மூளையே குழம்பியதாம்! ஏதோ கெடுதலுக்குத் தான் என்று பட்டதாம்! அது என்னவாயிருக்கும்?—

ஓ! புரிகிறது, புரிகிறது! மூத்தவள் பிள்ளை குட்டி இல்லாத மலடியாச்சே! தன்னருமைக் குழந்தைகளின் மீது, அவளின் கொள்ளிக் கண் படுமே! பிறகு என்ன வாகுமோ? பிள்ளைகளைக் காண விடக்கூடாது. ஏதாவது உபாயம் சொல்லித் தப்பிக்க வேண்டும் கண்ணில் காட்டாது சாக்குச் சொல்லி விரைவாக திருப்பி யனுப்பி விடவேண்டும். பிள்ளைப் பாசம் உந்தித் தள்ளியது. தெய்வ சக்தி மறைந்தது. மாயையோ; இருக்கலாம்! அவசர அவசரமாக, ஒவ்வொரு பிள்ளையையும் இழுத்து, ஒவ்வொரு கூடையாகக் கவிழ்த்து மூடியதாம்! சகோதரி தூரத்தில் வரும் போதே எல்லோரையும் மறைத்து விட்டதாம் பிறகு யோசித்ததில் 'நாம் மட்டும் ஏன் அவள் முகத்தில் விழித்து, கேட்பதற்கெல்லாம் பதில் சொல்லிக் கொண்டிருக்க வேண்டும்?'' என்று தோன்றியதாம். உடனே அருகில் இருந்த ஒரு நாகப் பாம்பின் புற்றில் அம்மன் தலைகீழாகப் பாய்ந்து நுழைந்ததாம். தலை, கழுத்து, உடல், இடுப்பு, கால்கள் வரையில் புகுந்து விட்டதாம் மண்ணுக்கு மேலே இருந்து பாதங்கள் மறைவதற்குள், அக்கா அம்மன் கதவைத் திறந்து கொண்டு வந்து விட்டது! விதி! ஒரு நொடியில் எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டது. ஆசை ஆசையாய் வந்த இடத்தில், இப்படிப் பட்ட அவமானம் நேர்ந்ததைத் தாங்க முடியவில்லை. பெண் பௌருஷம் அல்லவா! ஆங்காரமுடன் சாபம் இட்டது! ''நில்! அப்படியே! வீட்டுக்கு வந்த சகோதரியான என்னை, 'வா!' என்று அழைக்காத உன்னை, இனிமேல் உலகத்தோர் 'அழையா அம்மன்' என்றே அழைக்கட்டும்! உன் உடல் யாருக்கும் தெரியாமல் மண்ணுக்குள்ளேயே இருக்கட்டும்!''

அப்போது கோபத்துடன் திரும்பிப் போன அத்தனூர் அம்மன் அதன் பிறகு வரவேயில்லை. அன்று புற்றுக்குள் புகுந்த அழியா இலங்கை அம்மனும் வெளியே வர முடியவில்லை. மேல் நோக்கிய பாதங்கள் இன்றும் அப்படியே இருக்கின்றன. அந்தப் பாதங்களைத்தான் அனைவரும் அம்மனாக எண்ணி வணங்குகின்றனர். பூஜை, புனஸ்காரம், அபிஷேகம், ஆராதனை எல்லாமே அந்தத் திருவடிகளுக்குத்தான் ஆனாலும் பிரார்த்திக்கும் மக்கள் யாவருக்கும் ஒரு குறைவுமின்றி அவள் அருள் பாலித்தே வருகிருள்! மக்களின் நாவில், ''அழையாளத்தம்மன் கோயில்'' என்றே வழங்கி வருகிறது!

அம்மன் சகோதரிகளாக இருந்தாலும் அருகருகே இருந்தாலும், ஆசாபாசங்களுக்கு அவர்களும் விலக்கில்லை—என்பதையே எடுத்துக் காட்டுவதாக சுற்றுப்புற குடியானவர்கள் கூறுகிருர்கள். என்ருலும் அதற்காக அம்மக்கள் எந்த அம்மனையும் ஒதுக்கி விடாமல், இரண்டிற்குமே திருவிழா எடுத்து, பக்தி சிரத்தையுடன் வழிபடுகிருர்கள்! ●

> வாழ்க்கையின் சூத்திரக்கயிறு எண்ணற்ற இழைப் பின்னல்களால் முறுக்கேற்றப்பட்ட ஒன்று. ஒரு இழை பிரிந்தாலும் சூத்திரக்கயிறு முறுக்கு விட்டுப்போகும். தன்னம்பிக்கையே அதன் முறுக்கு
>
> —கவிஞர்

# தனிமை என்னும் தத்துவம்

ஏ. எஸ். ராகவன்.

எல்லோரும் புறப்பட்டு விட்டார்கள். வாசலில் இரண்டு குதிரைவண்டிகள் சிலிர்த்துக் கொண்டு நின்றன, நண்டும் சுண்டுமாய் குழந்தைகளெல்லாம் இடம் பிடித்துக் கொண்டு நகரமாட்டேனென்று அடம்பிடித்தன. இரண்டு மூன்று நாட்களாய் அமளி துமளி பட்டவீடே களை இழந்து விட்டது. நல்லவேளை! பம்பாய் அத்தை புறப்படவில்லை. பத்துநாட்கள் இருந்து விட்டுப் போகலாமே என்று தன் அண்ணு விடுத்த வேண்டுகோளை பெரியமனசு வைத்து ஏற்றுக் கொண்டாள்.

பெரிய மனசுதான். பத்மநாபனுக்கு அப்படித்தான் தோன்றியது இதே அத்தை இரண்டு வருடங்களுக்கு முன் கூட வந்திருந்தாள் அப்போது அவனுக்கு அவளைக் கண்டால் பிடிக்கவே பிடிக்காது. எதற்கெடுத்தாலும் ஒரு கண்டிப்பு, ஓர் உபதேசம், ஏதாவது ஒரு பழங்கதை சொல்லாவிட்டால் அவருக்கு தலை வெடித்து விடும். இப்போதே அவள் இருக்க மாட்டாளா என்றிருந்தது.

பத்மநாபன் ஆபீஸுக்கும் புறப்பட்டுக் கொண்டிருந்தான். வாசல் வரை சென்றவன் ஒருமுறை திரும்பிப் பார்த்தான். விடைபெற்றுச் செல்லும் உறவினர் கூட்டம் கூடத்தில் வழிந்து நின்றது. அந்தக் கும்பலின் ஒரு மூலையில் சுமதி நின்று கொண்டிருந்தாள் ஒருக் கணந்தான். அதற்குள் ஒரு புன் முறுவலை உதிர்த்தாள். பத்மநாபனுக்கு உச்சி முதல் உள்ளங்கால் வரையிலும் ஜில்லிட்டு விட்டது.

'நான் வரேன்... எல்லோருக்கும் டாடா' என்று கூறிவிட்டு ஸ்கூட்டரை எடுத்தான்.

'மாமா.. மாமா...' என்று கையசைத்தன குழந்தைகள், வண்டிக்குள்ளிருந்து. அம்மா அவசரம் அவசரமாக வந்தாள், வெளியே.

'டேய், பத்து! மத்தியானம் எப்போ வருவே சாப்பிட?' என்று கேட்டாள்.

'ஒரு மணிக்கு' என்ருன் பத்மநாபன்.

'நானும் அத்தையும் திருவள்ளறை போகிரேம்... சுமதி இருப்பாள் இங்கே படுத்தாமே சாப்பிட்டு விட்டுப்போ...என்ன, தெரிந்ததா?' என்ருள் அம்மா. அவளுக்கு இன்னமும் அவன் குழந்தை என்ற நினைப்பு

பத்மநாபன் முகத்தைச் சுளித்தான். 'நீயுமா புறப்படறே அம்மா? நான் ஹோட்டலிலேயே சாப்பிடுகிறேனே...' என்ருன்.

'அதெல்லாம் கூடாது. உடம்பு கெட்டுப் போகும். ஒருவாய் வந்து சாப்பிட்டு விட்டுப் போ' அம்மா கெஞ்சினுள்.

''ஆகட்டும்'' என்றவன் அம்மாவுக்கும் 'டாடா' என்று சொல்லிப் போய் விட்டான்.

அப்பாடா! ஒருவாரமாக அவஸ்தைப்படுவது அவனுக்கல்லவா தெரியும்! சுமதியுடன் தனியே பேச வேண்டும், அவள் என்னவோ பிரமாதமாகப் பாடுவாளாமே, அதையும் தனியே ரசிக்க வேண்டும் என்றெல்லாம் அவன் நெஞ்சு தவித்தது. மாமா பெண்ணின் சீமந்தக் கும்பலிலே அவள் இருந்த இடமே தெரியவில்லை எப்போதாவது மேகத் திரைக்கு பின்னிருந்து வெண்பதி தலைகாட்டுவது போல அவள் தென்படுவாள். அப்புறம் மீண்டும் திரை படர்ந்து விடும் இன்றைக்காவது அவளுடன் தனித்துப் பேசும் வாய்ப்பு கிடைக்கப் போகிறதே, அதை எண்ணி அவன் மனம் இப்போதே பூரிக்க ஆரம்பித்து விட்டது.

சீக்கிரமே அலுவலகத்தை விட்டுப் புறப்பட்டு விட்டான். வழியில் பூக்கடையில் எட்டு முழக் கதம்பமும் ஐந்நூறு மல்லிகைப் பூக்க

ளும் வாங்கிக் கொண்டான். அப்படியே 'லதா ஸ்வீட் ஸ்டா'வில் பம்பாய் ஹல்வாவும், சோன் பப்டியும் ஒரு பார்சல் கட்டிக் கொண்டான். வீட்டுக்கு வரும்போது சரியாக மணி ஒன்று ஆகிவிட்டது.

கூடத்தில் யாரையும் காணோம்.

சட்டையைக் கழற்றி மாட்டிவிட்டு, பின் கட்டுக்குப்போனான். முகம் கழுவிக் கொண்டு திரும்பி வந்தபோது சமையற்கட்டில் நிழல் ஆடிற்று.

'சாப்பிடலாமா?' என்று கேட்டான்.

'உம்...' என்று பதில் வந்தது.

பத்மநாபன் உள்ளே சென்றான். பலகை போட்டு எதிரே வெள்ளித்தட்டில் சாதம் பரிமாறப்பட்டிருந்தது. அருகில் சாம்பார், ரசம் கூட்டு, கறி, ஊறுகாய், மோர் எல்லாம் சிறு சிறு கோப்பைகளில் வைக்கப்பட்டிருந்தன. சுமதியே பரிமாறுவாள் என்று எதிர்பார்த்து வந்தவனுக்கு ஏமாற்றமே மிஞ்சியது. நிமிர்ந்து பார்த்தான், சமையற்கட்டுக்குள் அவளைக் காணவில்லை

'சுமதி!' என்று கூப்பிட்டான்

நிழல் அசைந்தது. வெளியே வாய் அசையவில்லை.

'கூடத்தில் பூ வைத்திருக்கிறேன்... எடுத்துக்கொள்' என்றான்

அவன் முன் கட்டுக்குப்போனான். அப்போது மென்காற்றில் அசைந்து அசைந்து பவுடரின் மணம் தாக்கிற்று. சுமதி சமையற்கட்டுக்குள் வந்தாள். அடுத்த நிமிடம் தட்டில் அல்வா விழுந்தது.

''அடேடே... அதை உனக்காகத்தான் வாங்கி வந்தேன் சுமதி. எனக்குப் போடாதே'. என்றான் பத்மநாபன். 'எனக்கு வேண்டாம்...நீங்கள் சாப்பிடுங்கள்' என்றாள் அவள்.

'அப்பாடா இப்போதாவது வாயைத்திறந்தாயே!' என்று சிரித்தான். பிறகு ரசத்தை உறிஞ்சியபடி 'கதம்பத்தை என்ன செய்தாய்?' என்று கேட்டான்.

'பெருமாள் படத்துக்கு மாலையாகப் போட்டேன்' என்றாள் அவள்

'ஏன் நீ வைத்துக் கொள்ளக் கூடாதோ?' என்று கேட்டான்.

'ஒரு கூடைப் பூவை வைத்துக் கொள்ள முடியுமா? ஒரு கிள்ளு வைத்துக் கொண்டேன்' என்றாள்.

'ஒரு கிள்ளா? அப்படீன்னா?'

பதில் வரவில்லை சுவரைத்துளைத்துக் கொண்டு சமையற்கட்டுக்கப்பால் பின் கட்டில் நின்று தன்னுடன் உரையாடிய பெண்ணின் முகம் சிவந்திருப்பதை பத்மநாபன் கண்டான் 'தண்ணீர் வேண்டும்' என்றான் அவன்

'கூஜாவில் வைத்திருக்கிறேன்!' என்றாள் அவள்,

'அது தெரிகிறது, வந்து எடுத்துக்கொடு'

'படுத்தாமல் சாப்பிட்டு விட்டு போகும்படி அம்மா சொல்லி இருக்கிறாள் மறந்துவிட்டதா?'

பத்பநாபனுக்கு இப்போது புரையேறி விட்டது, விலாவெடிக்கச் சிரித்ததில், 'நீ.. அழை யெல்லாம்... கேழ்ட்டுண்டு இழுந்தியா? ...'என்றான்.

'ஊஹூம் ..'

''பின்னே எப்படித் தெரிந்தது உனக்கு'

'ஹோட்டல்லே சாப்பிடட்டுமான்னுகேட் டீர்களே. அதுமட்டும் காதில் விழுந்தது'

'ஓஹோ... நீபொல்லாதவள்'

சுமதி அதற்கு மேல் அங்கு நிற்கவில்லை. கூடத்துக்குப் போய் விட்டாள். 'மத்தியானம் ஆபீஸ் லீவ்...சினிமா போய் விட்டு வரலாமா? 'என்றான் அவன்

'ஊஹூம் நான் வரவில்லை,' என்று கூறி வாசலுக்குப் போய் விட்டாள். பத்மநாபனுக்கு ஏமாற்றம் ஒருபுறம். எரிச்சல் ஒரு புறம் இத்தனை நாட்கள் கிடைக்காத வாய்ப்பு இன்று கிடைத்திருக்கிறது. நேரே நின்று இரண்டு வார்த்தை பேசினால் என்ன? கூடத்தில் அத்தனை பேர்கள் நடுவே முறுவலித்து விடைகொடுக்கத் தெரிந்த பெண்ணுக்கு இப்போது நாணம் சூழ்வானேன்? அம்மாவும் அத்தையும் வேண்டும் என்றேதான் சுமதியை வீட்டில் விட்டு விட்டுப்போய் விட்டார்கள். அவளுக்கு அவன்தான் என்பது முடிவாகிவிட்டது இன்னும் என்ன? பத்மநாபன் வாசலுக்கு வந்தான். சினிமாவுக்கு அவள் வருகிறாளா இல்லையா என்பதைக் கேட்டு விடுவது என்று, ஆனால் அவள் அங்கும் இல்லை. அடுத்த வீடு கலகலத்துக் கொண்டு இருந்தது. சுமதி இருக்கிற இடத்தில் சிரிப்பு கொப்பளிக்கும் ஆனால் அவன் முன்னால் தான் அவளால் பேச முடியவில்லை.

'சுமதி!' என்று கத்தினான் அவன்

சிரிப்பு சட்டென்று ஓய்ந்தது அவள் வந்தாள் திரும்பி. அவள்மட்டுமா? இல்லை. அடுத்த வீட்டு மல்லிகாவும் கூடவந்தாள்

'கூப்பிட்டீர்களா?'

'உம்...ஆபீஸ் போக வேண்டும் வீட்டைப் பார்த்துக்கொள்'

'லீவு என்றீர்களே?'

'இல்லை... லீவை கான்ஸல் செய்து விடலாம் என்று பார்க்கிறேன். ...ஏராளமாக வேலை இருக்கிறது'

'சாயந்தரம் எப்போது வருவீர்கள்?

'சொல்லமுடியாது — நாழியாகலாம்'.

ஸ்கூட்டர் புகையைக் கக்கிற்று, இடியாய் முழங்கிற்று, பிறகு அவளுக்கு அழகு காட்டுவது போல இரண்டுமுறை பட் பட் என்று வெடித்து விட்டு பாய்ந்து ஓடிற்று.

ஆபீஸில் வேலை ஓடினால் தானே? பல்லைக் கடித்தான் வேண்டுமென்றே பக்கத்து வீட்டுப் பெண்ணைத் துணைக்கு அழைத்து வந்து கேட்கிற கேள்வியைப்பார்! 'லீவு என்றீர்களே?' என்னவோ ஆசை! அழகான மூஞ்சிக்கு லீவுவேற வேண்டிக்கிடக்கறதாக்கும் தனியாய் இரண்டு வார்த்தைகள் பேசலாமே, சினிமாவுக்கு போகலாமே என்று, பேசாவிட்டால் போகட்டுமே! யாருக்கு நஷ்டம்? அப்படி ஒன்றும் கெஞ்சிக் கொண்டு நிற்கிறவனில்லை அவன். என்னவோ பல்லைப் பல்லைக் காட்டிக் காட்டி விடை கொடுத்தாளே என்று பார்த்தால் பிரமாத ராங்கி!

பென்சிலை நாலு முறை சீவும்படியாயிற்று. அன்றைக்கு, ஊதி எறிகிற சாதாரண-'ஸ்டேட்மெண்டுக்குப்போய் பத்து தடவை சரிபார்க்க வேண்டியிருந்தது வேலை ஓடிற்று வேகமாக. ஆனால் அத்தனையும் பிழையாகவே முடிந்தது.

மாலையில் வீடு திரும்பாமல் ஸ்கூட்டரைக் காவேரிக் கரைக்கு விரட்டினான். அம்மாமண்டபம் படித்துறையில் ஈ காக்கை இல்லை. மேல் வானில் சாயும் கதிரவனின் கிரணங்கள் தொலைவில் தென்னைகளைத் துளைத்துக்கொண்டு சர்வாங்காசனம் செய்வது போல் மேலே கால் தூக்கி நின்றன. சுமதியின் அழகு கண் முன் வந்து நின்றது, குபுக்கென்று பூமிக்குளிலிருந்து ஊற்று கிளம்புவது போல ஓர் அழகின் பூரிப்பில் அவள், எப்படி உப்பி விட்டாள்! கன்னத்தில் எல்லாம் ஒரு கொழுமை, ஒரு சிவப்பு, ஒரு வேறு வேறு என்னவோ! கண்ணிலெல்லாம் ஒரு கூர்மை. ஒரு நளினம், ஒரு வேறு என்னவோ! நடையில் கூட ஒரு நிதானம் ஒரு மோகனம், ஒருவேறு என்னவோ? எல்லாமே என்ன வோ தான்.

அவனுக்கு இன்று புத்தி போயிற்றே, அது கூட அம்மா சூசகமாக சொன்னாளே படுத்தாமல் சாப்பிட்டு விட்டுப்போ என்று. இந்த முசுட்டின் குணம் தெரிந்துதான் சொல்லியிருப்பாள் போலும்! மெல்ல மெல்ல இருள் கவிந்தது. பத்மநாபனுக்கு வீட்டுக்குப் போகவே

பிடிக்கவில்லே. ஆனுல் அம்மா தவிப்பாள்- அவளுக்கு இன்னமும் அவன் குழந்தை!

வீட்டுக்கு வந்ததும் நேரே மாடிக்குப் போய் சட்டையை கழற்றி எறிந்து விட்டு சாய்வு நாற்காலியில் விழுந்தான். கீழே வரப் பிடிக்கவில்லே. ஒரே கும்மாளமும் பாட்டும். அங்கே சுமதி பாடிக் கொண்டு இருந்தாள். அம்மா,அத்தை,அப்பா,பாட்டி இன்னும் எதிர் வீடு, பக்கத்துவீடு எல்லாம் 'சபாஷ்' போட்டுக் கொண்டிருந்தன. அவனுக்கு அவள் முதுகில் ஓங்கி ஓர் அறை கொடுக்க வேண்டும் என்றிருந்தது: மத்தியானம் யாரும் இல்லேயே வீட்டில். அப்போது பாடினுல் என்னவாம்! 'பத்து! சாப்பிட வரவில்லேயா?' அம்மாவின் குரல் நீண்டுவந்தது மாடிக்கு.

'எனக்குப் பசியில்லே'

'பசியில்லேயா? ஏன்?'

'எனக்குப் பசியில்லேன்னு பசியில்லே .. சும்மா தொண தொணக்காதேம்மா?'

'தலேயை வலிக்கறதா?'

'அடாடா!... நீ சும்மா இருக்க மாட்டியாம்மா?' அம்மா மாடிக்கே வந்துவிட்டாள். பாவம் அவளுக்கு கவலே! தலேயைத் தொட்டுப் பார்க்கிருள். கழுத்தைத் தொட்டுப் பார்க்கிருள், 'உடம்பு சுடறதேடா. ராஜா. ஹோட்டல்லே எதாவது சாப்பிட்டியா?' என்கிருள். அவன் எதுவும் சொல்லவில்லே. சொன்னுல் அவளுக்குப் புரியுமா?

அவள் கீழே போய் விட்டாள் என்று சற்று நிம்மதி அடைவதற்குள் அப்பா வந்து விட்டார். அம்மாவுக்கு மேலே இந்த அப்பா! எப்படித்தான் ஒரு கம்பெனியிலே வேலே பார்க்கிருரோ!

அவரும் கீழே போனுர். அடுத்து சுமதி வந்தாள். அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

'என் மேல் கோபமா?' என்ருள் அவள்

அவன் பதில் சொல்ல வில்லே.

அருகில் வந்து நெற்றியில் கைவைத்தாள் அவள். ஜில்லென்று இருந்தது. தாமரைத் தண்டுபோல 'உடம்பு சுடறதே!' என்ருள்.

'சுடாம பின்னே வாழுமோ!' என்று சீறி ஞன் அவன்.

'எதுக்காக கோபம்?' என்ருள் அவள்

'கோபம் இல்லாம பின்னே உன்னை வாழ்த்தச் சொல்கிருயோ?'

'இதோபாருங்கள்... உங்கள் மனது நேக்குத் தெரியும்..'

'தெரிஞ்சும் ஏன் சினிமாவுக்கு வரலேன்னு சொன்னே?'

'இப்போது நாம் போகக்கூடாது.'

'உக்கும் தனியா இருக்கிற போது போகாமல் பக்கத்து வீட்டு மல்லிகாவையும் எதிர் வீட்டு அல்லிகாவையும் அழைச்சிண்டு போகணுமாக்கும்?'

'ஆமாம்...?'

'என்ன ஆமாம்..?'

'தனியே இருக்கிறபோது விலகியிருக்கணும், விலகி இருக்கிறபோது தனியா இருக்கணும்'

'உங்க அம்மா வாடை உனக்கும் வீசுகிறதோ?.. இந்த மாதிரி உபதேசமெல்லாம் எனக்குத் தேவையில்லே. பிடிக்கவும் பிடிக்காது', என்ருன் அவன்.

'உபதேசமில்லே .. உங்களுக்கு நான் உபதேசம் பண்ணலாமா? நாளைக்கு எல்லாம் ஆகட்டுமே .. அப்புறம் நாம் எங்கே வேண்டுமாஞலும் போகலாம் தனியாயிருக்கிறதுங்கிறது, நாம் இரண்டு பேர் மட்டும் இருக்கிற போது மட்டும் தாஞ? இத்தனை பேர் நடுவிலேயும் நாம் மட்டும் தனி 'உலகமாக வாழலாம் இல்லையா?... அதுக்கு வேளை வரவேண்டாமா?' என்ருள் சுமதி

அவன் நிமிர்ந்து அவளைப் பார்த்தான் பகலில் பதுங்கிப் பதுங்கி ஒதுங்கியவள் இப்போது அம்மாவும் அத்தையும் கீழே இருக்கும் போது அவனை தனியே அழைக்க வந்திருக்கிருள் தனிமை என்பது அவள் கூறியது போல ஒருவனும் ஒருத்தியும் உலகறிய ஒன்று படுத்தப் படும் போது, இரு மனங்கள் சங்கமித்து விடுகின்றனவே, அதுதான்போலும்! சுமதி அதைத் தானே உணர்த்திஞள்! இந்த நியாயம் அவனுக்கு ஏன் படவில்லே?

'சரி... சாப்பிட வாருங்கள்'

அவன் கிளம்பிஞன்,

''இப்போது பசியெடுத்துவிட்டதா!'' என்று கேட்டுச் சிரித்தாள் அவள்.

''பசியான பசி, போயேன்!''

''சரி, சரி ...என்னேடு கீழே இறங்கி வராதீர்கள். போய் அம்மாவை அனுப்புகிறேன்... கொஞ்சம் பிகு பண்ணிக் கொண்டு அப்புறம் கீழே இறங்கி வாருங்கள்'' என்ருள் அவள்

''பாவம் குழந்தை! பசித்தால் கூடச் சொல்லத் தெரியாது! எப்படித்தான் குடும்ப பாரம் உறைக்கப்போகிறதோ தெரியவில்லே இறைவனுக்கு!'' என்று ஆதுரப்பட்டுக் கொண்டு மாடியேறிய அம்மாவை இப்போது பத்மநாபன் பார்த்த பார்வையில் குழந்தைத் தனத்தை மீறிய வேறு என்னவா இருந்தது! ●

# Translation of Sekkizhar's Periya Puranam




118) காவணம் எங்கும் இட்டுக் கமுகொடு கதலி நாட்டிப்
பூவணை தாமம் தூக்கிப் பூரணகும்பம் ஏந்தி
ஆவண வீதி எல்லாம் அலங்கரித் தண்ணலாரை
மாவணை மலர்மென் சோலை வளம்பதி கொண்டு புக்கார்.

They raised festoons; areca leaves and (severed) plantain trees
Were to posts and thresholds tied: garlands were dangled; the holy ones love vessels sacred,
The bazaar was bedecked. it was thus they received the great one
To their place, teeming with flower gardens-the haunt of honey-beetles

NOTES

The raising of festoons, the tying of areca leaves and severed plantain trees to posts, gateways etc. the dangling of garlands, and the bearing of Vessels (brass pots) filled with sacred (sanctified sacramental) water bespeak the ceremonial reception accorded to the divine child. These form part of the relgious reception. The arrival of the divine child has its social significance also. Therefore the bazaars are also bedecked.

119) திருமறை யோர்கள் சூழ்ந்து சிந்தையின் மகிழ்ச்சி பொங்கப்
பெருமறை ஓசைமல்கப் பெருந்திருக் கோயில் எய்தி
அருமறை பொருளா னரைப் பணிந்தணி நற்சங் கத்தின்
தருமுறை நெறியக் கோயில் சார்ந்தமை அருளிச் செய்தார்

While the sacred Brahmins fore-gathered with growing gladness (1)
And chanted loud the Vedas, he entered the holy temple great (2)
And worshipped Him the Scriptures-incarnate and, gan to praise Him (3)
That willingly abode in that temple formed like Valampuri-chunk (4)

Line 2. The Vedas are chanted to purify the atmosphere and make it fit for the advent of the holy one.

The holy temple spoken to here, is one of the seventy-eight temples built by the grand monarch-devotee Kocchenkat Chozha Nayanar. This temple resembles the shape of that pecial type of conch which is known as Valampuri-chunk.

120) கறைமணி கண்டர் கோயில் காதலால் பணிந்து பாடி
மறையவர் போற்ற வந்து திருவலம் புரத்து மன்னும்
இறை வரைத் தொழுதுபாடும் 'கொடியுடை' ஏத்திப் போந்து
நிறைபுனல் திருச்சாய்க்காடு தொழுதற்கு நினைந்து செல்வார்

He adored and sang at the temple of Him whose throat the poison holds.
And came out with the encircling Brahmins to hail the Lord
Of Thiruvalampuram in a decad beginning with the words 'kodiyudai',
This done, to worship the Lord at Thirucchaikkadu he fared forth.

Line 3. Thiruvalampuram is popularly known as Melap perum Pallam (மேலப் பெரும் பள்ளம்.)

Line 4. Thirucchaikkadu is the place where the Cauvery empties herself into the sea.

121) பன்னகப் பூணி னாரைப் பல்லவ னீச்ச ரத்துச்
சென்னியால் வணங்கி ஏத்தித் திருந்திசைப் பதிகம் பாடிப்
பொன்னிசூழ் புகாரில் நீடு புனிதர்தம் திருச்சாய்க் காட்டு
மன்னுசீர்த் தொண்டர் எல்லாம் மகிழ்ந் தெதிர் கொள்ளப் புக்கார்.

At Pallavaneechwaram he reverently prostrated before the Lord
Decked with serpents, and hailed Him in verse and solemn airs
And greeted by devotees of ever during renown, he entered Thirucchaikkadu
Where abides the Holy One amidst Puhar by Cauvery encircled.

Line 4. Puhar: The great Kaveripoompattinam This was one of the capitals of the chola kingdom It had in the ancient days a natural harbour As a commercial centre it was a mart of many nations. For a proper study of Puhar, the reader is advised to consult the great epic Silappathikaram

122) வானளா வுயர்ந்த வாயி லுள்வலங் கொண்டு புக்குத்
தேனலர் கொன்றை யார்தந் திருமுன்பு சென்று தாழ்ந்து
மானிடந் தரித்தார் தம்மைப் போற்றுவார் 'மண்புகார்' என்(று)
ஊனெலாம் உருக ஏத்தி உச்சிமேற் குவித்தார் செங்கை.

Passing the threshold sky-high, he did the sacred round and stood before the Lord (1)
With honied cassia dight and bowed in obeisance, his adoring hands roseate (2)
He lifted above his crown and hailed in verse that would the flesh melt, (3)
The Lord Whose Left Hand the deer displays, with a decad beginning thus 'Mann Puhar' (4)

Line 4. The decad begins thus: 'மண்புகார் வான் புகுவர்'. The message is that those who worship Lord Siva will not enter the earth (in embodied state) but will enter the Heaven. The word 'Puhar' yields a beautiful pun in the hands of Thirugnana Sambhandar.

123) சீரினில் திகழ்ந்த பாட்டில் திருக்கடைக் காப்புப் போற்றி
பாரினில் பொலிந்த தொண்டர் போற்றிடப் பயில்வார் பின்னும்
ஏரிசைப் பதிகம் பாடி ஏத்திப் போந்து இறைவர் வெண்கா
டாருமெய்க் காதலோடும் பணிவதற் கணைந்தா ரன்றே.

He sealed his decad with a great hymn of benediction
And stood praying, again, he-the cynosure of all devotees
Sang psalms even more melodious and prayed once again.
Then to worship the Lord at Venkadu, with true love, forth he proceeded.

Line 3. Gnana Sambhandar can be excelled by Gnana Sambhandar only

124) பொன்னிதழ்க் கொன்றைவன்னி
புனல்இள மதியம் நீடு
சென்னியர் திருவெண்காட்டுத் திருத்
தொண்டர் எதிரே சென்றங்(கு)
இன்னதன் மையர்க ளானா் எனவொணு
மகிழ்ச்சி பொங்க
மன்னுசீர்ச் சண்பை யாளும் மன்னரைக்
கொண்டு புக்கார்.

The devotees at Thiruvenkadu of the Lord Siva Who doth wear (1)
The golden petalled cassia, flameflood, and the crescent (2)
Came before the King of Sanbai of ever-lasting fame (3)
With growing joy inexplicable and took him to their town (4)

The King of Sanbai is Gnana Sambhandar. He is hailed as king as he rules hearts fo devotees

125) முத்தமிழ் விரகர் தாமும் முதல்வர்கோ
புரத்து முன்னர்ச்
சித்தநீ டுவகை யோடும் சென்றுதாழ்ந்
தெழுந்து புக்குப்
பத்தராம் அடியார் சூழப் பரமர்கோ யிலைச்
சூழ் வந்து
நித்தனர் தம்மின் பெய்தி நிலமுறத் தொழுது
வீழ்ந்தார்.

The Master of three-fold Tamil stood before the Lord's tower
And with increasing gladness bent and prayed and then went
Into the temple to do the sacred round circled by the servants of the Lord
And fell prostrate on the ground before the Lord Eternal in worship true.

# வாழ்த்தும் வரவேற்பும்

—சிட்டி

இது பற்றுக்குறை யுகம் பஞ்ச சகாப்தத்தில் அடியெடுத்து வைக்கும் அரிய வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது. உணவுப் பொருளிலிருந்து எரிபொருள் வரை எல்லாம் பற்றுக்குறை விலைகள் மாத்திரம் எவரெஸ்ட் சிகரத்தை வெறும் மண்மேடு மாதிரி காட்டும் அளவுக்கு உயர்ந்து வருகின்றன. எதற்குப் பஞ்சம் ஏற்பட்டாலும் விலைவாசிகளுக்கு மட்டும் பஞ்சம் ஏற்படாதுபோல் இருக்கிறது விலைகள் மட்டுமல்ல, வேறு இரு பண்புகளுக்கும் நம்மிடையே பஞ்சம் இல்லை அவைதான் வாழ்த்தும் வரவேற்பும்

வாழ்த்துக்கள்தான் வாழ்வுக்கு வளம் கொடுக்கும் என்ற கொள்கையில் நாம் இப்பழக்கத்தை செழிப்பாக வளர்த்து வந்திருக்கிறோம். வாழ்த்துக்களில்தான் எத்தனை வகை! மிகவும் சாதாரணமாக வழங்குவது ஆண்டு தோறும் பரிமாறிக் கொள்ளப்படும் புத்தாண்டு வாழ்த்துக்கள் புத்தாண்டுக்கு மட்டும்தான் வாழ்த்துக்கள் என்றால் இந்த விஷயத்தில்கூட பற்றுக்குறை இருக்கும் வருஷம் முழுவதும் எத்தனையோ பண்டிகைகள் தீபாவளி, பொங்கல் போன்றவை. இந்த சந்தர்ப்பங்களிலும் வாழ்த்துக்கள் அனுப்பும் வழக்கம் வலுத்து விட்டது, கிறிஸ்துமஸ் விழாவிற்கும் ஜனவரியில் பிறக்கும் புத்தாண்டுக்கும் மட்டும் என்ற முறையில் தனிப்பெருமை கொண்டிருந்த வாழ்த்து மடல்களுக்கு இப்போது போட்டி அதிகமாகிவிட்டது. சினிமா நட்சத்திரங்கள் முதல் சிற்றெறும்பு வரையிலான படங்களுடன் வாழ்த்துமடல்களை அச்சிட்டு விற்பனை செய்வது ஒரு தனிக் கலையாகவும், பெரும் தொழிலாகவும் இன்று விளங்குகிறது. வாழ்க்கையின் சிறப்பான கட்டங்களுக்கு வரலாற்றுச் சிறப்பு கொடுக்கும் இந்தக் கலையையும் 'வாழ்க' என்று கூறி வாழ்த்துவோம், மகிழ்ச்சி தரும் மங்கலச் சம்பவங்களுக்காகவும், பண்டிகை, விழா முதலியவைகளுக்காகவும் தந்திமூலம் வாழ்த்துகள் அனுப்புவதற்காக இப்பொழுது இருபத்தியேழு சொற்றொடர்கள் அமுலில் இருக்கின்றன. இவைகளில் திருமணத்திற்காக நான்கு, குழந்தைப் பிறப்புக்காக ஒன்று, பிறந்தநாளுக்காக ஒன்று, பரிட்சை வெற்றிக்காக இரண்டு, பொதுவான வாழ்த்துக்கள் இரண்டு மற்றும் தீபாவளி கிறிஸ்துமஸ், ஹோலி, ஈத்முபாரக் போன்ற பல்வேறு மதங்களைச் சேர்ந்த பண்டிகைகளுக்கும் சுதந்திர தினம், குடியரசுதினம், தேர்தலில் வெற்றி. முதலிய விஷயங்களுக்கும் தனித்தனி இலக்கமிட்ட வாழ்த்துச் செய்திகள் குறிப்பிடப்பட்டிருக்கின்றன தந்தி அனுப்பும் பொழுது அந்தந்த வாழ்த்துக்கான இலக்கத்தை மாத்திரம் குறிப்பிட்டால் போதும் அந்தத் தந்தியைப் பெறும் அஞ்சலகத்தார் இலக்கத்திற்கேற்ற வாழ்த்துச் செய்தியை எழுதி அனுப்புவார்கள் என்பது விதி, மரபு, நம்பிக்கை. இந்த நடவடிக்கை பொதுவாக சரியாக நடந்து வருகிறது என்றாலும் வாழ்த்துச் செய்தியின் எண்ணிக்கை வரிசையைக் குறிக்கும் இலக்கத்தை மட்டும் வாழ்த்தாக கிடைக்கப் பெற்ற மணமக்களும் உண்டு. இதே வகையில் என்னுடைய நண்பரொருவர் வீட்டில் நடைபெற்ற ஐந்து உபநயனங்களுக்கும் அந்தப் பிரம்மச்சாரிகளுக்கு, மணமக்களுக்கு உரித்தான வாழ்த்துக்கள் வரப்பெற்றதையும் வரலாறு பறைசாற்றுகிறது.

மகிழ்ச்சி தரும் சம்பவங்களுக்கான வாழ்த்துச் செய்தியை அவ்வளவு அவசரப்பட்டு தந்தி மூலம் அனுப்புவானேன்? புத்தாண்டு வாழ்த்துகளைப் பலர் முன் கூட்டியே அனுப்பி விடுகிறார்கள் சிலர் ஆண்டு பிறந்து சில வாரங்கள் கழித்து கூட அனுப்புகிறார்கள். ஆனால் திருமணம் போன்ற விஷயங்களில் சம்பவம் நடக்கும் அன்றைய தினமே வாழ்த்து போய்ச் சேர்ந்தால்தான் அழகு என்ற முறையில் தந்தி

பயன்படுகிறது என்று வைத்துக் கொள்ளலாம் திருமணத் தேதியை மறந்து விடாமல் நினைவு வைத்துக்கொண்டால்கூட திருமண அழைப்பை எங்காவது மறந்து வைத்து விடுகிறோம் சில சமயங்களில் முகவரியைத் தேடுவதற்குள் முகூர்த்தம் முடிந்துவிடுகிறது சித்திரை, தை போன்ற திருமண மாதங்களில் பல அழைப்புகள் கிடைக்கும்பொழுது குறிப்பிட்ட மணவினையின் தேதி, முகவரி முதலியவைகளைத் தவறாமல் எழுதி வைத்துக் கொண்டு வாழ்த்துச் செய்திகள் அனுப்புவது பெரிய நடவடிக்கையாகிவிடுகிறது. எல்லாம் திருமணமாகவே இருந்து விட்டால்கூட தேதிகள், முகவரிகள், வாழ்த்துக்களுக்கான எண் வரிசை முதலிய விஷயங்களில் அதிக கவனம் அவசியமாகிறது ஆனால் ஏழெட்டு திருமணங்கள், ஒரு பிறந்த நாள், சில பரிட்சை வெற்றிகள், போன்ற வெவ்வேறு விதமான சம்பவங்கள் பல்வேறு தேதிகளில் நிகழ்வதாயிருந்தால் வாழ்த்துச் செய்தி அனுப்பும் வகையில் திறமையான கடும் உழைப்பு அவசியமாகிறது. தந்தி அனுப்பும் நாளன்று மணப் பத்திரிகை வைத்த இடத்தை மறந்துவிட்டு, முகவரி கிடைக்காமல் தவிக்கும் பொழுது முதலில் வீட்டிலுள்ள குழந்தைகளின் மீது வசை பொழிந்த பிறகுதான் வாழ்த்து அனுப்ப முடிகிறது.

சாதாரணமாக வாழ்த்துக்கள் அனுப்புகிறவர்கள் ஒவ்வொருவரும தம்முடைய வாழ்த்துக்காகத்தான் மணமக்களும் மற்றவர்களும் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று நினைப்பது இயல்புதான் சிறு கிராமங்களில் நடைபெறும் திருமணங்களைப் பற்றிய அழைப்புகளில் அருகிலிருக்கும் தந்தி அலுவலகத்தின் முகவரியும் அச்சிடப்படுவதை ஒரு எச்சரிக்கையாக எடுத்துக் கொள்வதுதான் நியாயம்.

திருமணம் நிகழும் இல்லத்தில் தந்திகள் வந்து சேரும் காட்சியை கவனிப்போம். வாழ்த்துத் தந்திகளைப் பெற்றுக் கொள்வதற்கென்று இரண்டொரு இளைஞர்கள் (ஆண், பெண் இருபாலரும்) தயாராக இருப்பார்கள். கட்டுக் கட்டாக தந்தி ஊழியர் கொண்டு வந்து கொடுக்கும் வாழ்த்துக்களைப் பொதுவாக மணமகளைச் சேர்ந்த தந்தி வரவேற்புக் குழு பெற்றுக் கொள்ளும். அவைகளைப் பரிசீலித்து பிறகு மணமகனுக்கென்று தனியாக முகவரி இடப்பட்ட வாழ்த்துக்களை எதிர்க்கட்சி போல் நிற்கும் மணமகன் தோழர்களிடம் ஒரு மாதிரி பார்வையுடன் கொடுப்பார்கள். தந்திகளைப் பரிசீலிக்கும்பொழுது குறிப்பிட்ட சில வாழ்த்துகளை உற்சாகத்துடன் ஊன்றிப் படித்து கூடியிருக்கும் மற்றவர்களிடமும் காண்பிப்பார்கள். அந்த வாழ்த்துக்கள் நீங்களோ, நானோ அனுப்பியவையல்ல. ஒரு சினிமா நட்சத்திரமோ, இன்றைய அல்லது முன்னாள் அமைச்சரோ அனுப்பியதாக இருக்கும். திருமணம் முடிந்து பல நாட்கள் கழிந்து மணமக்களை நாம் சந்திக்க நேரிடும்பொழுது நாம் அனுப்பியவாழ்த்தையும் பற்றிக் குறிப்பிடுவாரென்று ஆவலுடன் எதிர்பார்த்து, பேச்சை அந்த விஷயமாகத் திருப்புவோம். நமது வாழ்த்து கிடைத்ததா என்று நேரடியாகக் கேட்பதற்கு சிறிது தயக்கம். ஏனென்றால் நாம் முகவரியை மறந்து, வாழ்த்த அனுப்பாமலிருந்த திருமணத்தைச் சேர்ந்த தம்பதிகளாயிருந்துவிட்டால்? அவர்களும் வாழ்த்துக்கள் எல்லாவற்றையும் நினைவில் வைத்துக்கொள்ள முடியாததால், பொதுவாக உங்கள் வாழ்த்து கூட கிடைத்து, நன்றி என்று கூறி தப்பித்து விடுவார்கள்.

எப்பொழுதுமே பொதுமக்களுக்கு அவர்கள் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் வசதி செய்து கொடுப்பது என்று கங்கணம் கட்டிக் கொண்டிருக்கும் தபால் தந்தி துறையினர், வாழ்த்துத் தந்தி அனுப்புவதில்கூட சில எளிய முறைகளைக் கையாளலாம். ஒரு யோசனை தோன்றுகிறது. அவ்வப்பொழுது தேதிகளைக் குறிப்பிட்டு வாழ்த்துக்களின் இலக்கங்களையும் எழுதி அனுப்புவதும், வேகம் நிறைந்த இந்த நாட்களில் சிரமம் தானே? ஆகவே என்னுடைய புரட்சிகரமான திட்டத்தில் சில முக்கிய அம்சங்களை மட்டும் இப்பொழுது குறிப்பிட ஆசைப்படுகிறேன் பொது மக்களில் ஒவ்வொருவரும் ஆண்டுதோறும் ரேடியோ லைசென்ஸ்போல ஒரு தொகையைக் கட்டணமாக செலுத்திவிட வேண்டியது அவ்வாறு செலுத்திப் பதிவு செய்து கொண்டவர்கள் தங்களுக்கு வரும் திருமண அழைப்புகள், மற்றும் பிறந்தநாள் கொண்டாடுபவர்களின் முகவரிப் பட்டியல்கள் முதலியவற்றை தந்தித் துறையில் இதற்கென நிறுவப்படும் விசேஷப் பிரிவுக்கு அனுப்பிவிட வேண்டியது இந்தத் தகவல்களின் அடிப்படையில் 'விசேஷ வாழ்த்துப் பிரிவு' அவ்வப்பொழுது வாழ்த்துக்களை சம்பந்தப்பட்ட முகவரிக்கு அனுப்ப வேண்டியது. இந்த திட்டத்தின் பயனாகத் தபால் தந்தி துறையின் பெருவாரியான வேலை வாய்ப்புகள் ஏற்படும் என்பதை சொல்லத் தேவையில்லை, கூடுதலாகத் தந்திக் கம்பிகள் கூட போட வேண்டியிருக்கலாம். வருமானமும் அமோகமாக அதிகரிக்கும். ஆகையால் போஸ்ட்-கார்டுகளை அல்லது அஞ்சல் அட்டைகளை இலவசமாகக் கூடப் பொதுமக்களுக்குக் கொடுத்து விடலாம்.

இது ஒரு தேசீயப் பிரச்னை இன்றைய நிலையில் திருமண வாழ்த்துக்கள் அனுப்புகிறவரின் விஷயத்தை கவனிப்போம். மணமக்களோ மணம் செய்து வைப்பவர்களோ ஆயிரக் கணக்கான பணத்தை செலவு செய்துவிட்டு நூற்றுக் கணக்கான வாழ்த்துக்களைப் பெற்றுக்கொண்ட பின் எவ்வகையில் நன்றி தெரிவிக்கிறார்கள். உங்களையும், என்னையும் வந்து சந்தித்து நன்றி கூறுவதில்லை. வாழ்த்துத் தந்திக்கு பதிலாக, அஞ்சல் அட்டை கூடப் போடுவதில்லை தங்களுக்குக் கணக்கற்ற வாழ்த்துச் செய்திகள் வந்துவிட்டதாகவும் ஒவ்வொன்றுக்கும் தனித் தனியாக பதில் அனுப்ப இயலவில்லை என்றும் வருத்தம் தெரிவித்து எல்லோருக்கும் பொதுவான நன்றி கூறலை பத்திரிகையில் விளம்பரமாகப் போட்டுவிடுகிறார்கள்.

வாழ்த்துத் தந்தி அனுப்புகிறவன் வாயில்லாப் பூச்சி என்று நினைத்து உதாசீனம் செய்யும் இந்த விளம்பரப் பழக்கத்தை எதிர்த்து ஒரு இயக்கமோ, போராட்டமோ, பந்தோ ஆரம்பிக்கலாம் என்று கூடத் தோன்றுகிறது. மணமக்களை கேரோ செய்வதென்றால் திருமணத் திற்கே போயாக வேண்டும். இன்று தம் முன் நிற்கும் பிரச்னை வாழ்த்துத் தந்திகளைப் பற்றியது மட்டுமாகையால் விளம்பரத்தை விளம்பரத்தினாலேயே வெல்ல வேண்டும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன். அடுத்த திருமணப் பருவத்தில் பத்திரிகைகளில் பின்வரும் முறையில் ஒரு விளம்பரத்தைக் கண்டால் ஒருவரும்

வியப்படைய வேண்டாமென்று கேட்டுக் கொள்கிறேன்.

**வாழ்த்து விளம்பரம்**

இந்தப் பருவத்தில் எனக்குக் கணக்கற்ற திருமண அழைப்புகள் வந்திருக்கின்றன. மற்றும் பிறந்தநாள், உபநயனம், சீமந்தம் முதலிய நிகழ்ச்சிகள் பற்றியும் அழைப்புகள் வந்து குவிந்த வண்ணமாயிருக்கின்றன. தவிர என்னுடைய நண்பர்கள் பலர் பரிட்சைகளிலும், தேர்தல்களிலும் வெற்றி பெற்றிருக்கிறார்கள். இந்த சம்பவங்கள் ஒவ்வொன்றுக்கும் தனித்தனியே வாழ்த்துக்கள் அனுப்புவதற்காக நான் விசேஷமாக அலுவலகம் ஒன்றையும் நிறுவவில்லை என்ற காரணத்தால் இந்த வாழ்த்தையே எனக்கு அழைப்பு அனுப்பும் எல்லோரும் ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறேன்.

இம்மாதிரி விளம்பரம் ஒன்றை பத்திரிகைகளில் வெளியிட்டுவிடலாம் பணச் செலவுதான்; இருந்தாலும் பழக்கத்தைக் கைவிட முடியுமா?

விளம்பரத்தைப் பற்றிப் பேசும்பொழுது இத்துறையில் மற்றொரு பழக்கம் நினைவுக்கு வருகிறது. ஒரு புதிய தொழில் நிறுவனம் அமைக்கப்படுகிறது. அல்லது வெள்ளி, மணி அல்லது வைரவிழா கொண்டாடும் நிலையை அடைந்துவிடுகிறது என்று வைத்துக் கொள்வோம். அந்த நிறுவனத்துடன் தொடர்பு கொண்ட பல்வேறு நிறுவனங்கள் பத்திரிகைகளில் பெரிய விளம்பரங்கள் மூலம் வாழ்த்தும் பாராட்டும் தெரிவிப்பதைப் பார்க்கிறோம். செய்திகளுக்குத்தான் காகிதப் பஞ்சம். பாராட்டு விளம்பரங்களுக்கு எல்லையற்ற பக்கங்கள்!

இத்தகைய வாழ்த்துக்கள் நேரடியாக கலந்துகொள்ள முடியாத வைபவங்களைப் பற்றியவை. நாமே நேராகச் சென்று வாழ்த்துக் கூறும் பாராட்டுக் கூட்டங்களுக்கு இப்பொழுது பஞ்சம் இல்லை. அத்தியாவசியப் பொருள்கள்தான் கிடைக்கவில்லை வாழ்த்துகளிலாவது பரந்த மனப்பான்மையுடன் இருப்போம் என்ற உயர்ந்த எண்ணம்தான் நம்மைத் தூண்டுகிறது என்று நாமே உறுதியாக நம்புகிறோம். ஒரு பிரமுகருக்குப் பாராட்டு என்றால், அந்த சமயத்தில் பாராட்டுரை வழங்க பலர் முன்வருவார்கள். இந்த வாழ்த்துக்கள் உரைநடையிலும் இருக்கும்; கவிதையாகவும் இருக்கும். கவிதைகளையும் வாழ்த்து மடல்களையும் அச்சடித்து விநியோகிப்பதால் கவனமாகக் கேட்காதவர்கள் கூட தப்ப முடியாத நிலை ஏற்படுகிறது வாழ்த்துக்கள் தாமாக திடீரென தோன்றி விடுவதில்லை. இதற்கான விழாக்கள் தவிர. வேறு காரணங்களும் உண்டு. வாழ்த்துக்களை உற்பத்தி செய்யும், அல்லது தூண்டும் சம்பவங்களில் வரவேற்புகள் முதலிடம் பெறுகின்றன. முன்பெல்லாம் திருமணங்களில் வரவேற்பு என்ற தனி வைபவம் கிடையாது. அழைப்பை ஏற்றுக் கொண்டு வருகை தருபவர்கள் எல்லாருமே வரவேற்புக்குரியவர்கள்தான். அண்மை ஆண்டுகளில் வரவேற்பு என்னும் வைபவம் திருமணங்களில், மாலையில்தான் என்றாலும், சிறப்பிடம் வகிக்கிறது முகூர்த்தம் என்ற வைபவத்துடன் போட்டி போடுகிறது. வரவேற்புக்கு விரும்புவர்கள்தான் வரவேற்கப் படுவார்கள்; முகூர்த்தத்திற்கு வருபவர்கள் வந்து தீர வேண்டியவர்கள், என்ற ஒரு கருத்து

நிலவுவதற்கு இப்பழக்கம் இடம் கொடுக்கிறது. திருமணச் சடங்கிற்கு ஆகும் செலவு தவிர வரவேற்புக்குத் தனியாக செலவு செய்ய வேண்டுமென்பது மணமகன்வீட்டார் விதிக்கும் நிபந்தனைகளில் ஒன்றாகக் கூட தலையெடுக்கிறது.

போகட்டும், திருமணம் என்பதே பணச் செலவுக்காக ஏற்பட்டதுதான். நூறோடு நூற்று ஒன்றாக வரவேற்புக்காக மேலும் செலவு செய்தால் என்ன, என்ற கருத்து கொண்டவர்களுடன் பட்டி மண்டபம் நடத்திப் பயனில்லை. இதையும் ஒரு பண்பாகப் பாவித்து விடுவோம். வேறு வகை வரவேற்பு ஒன்று. இது கூட்டங்களிலும் மாநாடுகளிலும் முதலிடம் வகிக்கிறது. இதுதான் வரவேற்புரை. தலைமை உரையை விட முக்கியமானது. வரவேற்புரையில் கேட்டுக் கொண்ட பிறகு தானே தலைவர் தலைமை வகித்து உரையாற்ற முடியும்; இந்த வரவேற்புரையில் பல விஷயங்கள் அடிபடும். மாநாட்டின் நோக்கம், எதிர்காலத் திட்டம், தலைவரின் குண விசேஷம் போன்ற விவரங்களை எடுத்துக்கூறிவிட்டு வரவேற்புரையாளர் 'வருக வருக' என்று உங்களை அழைக்கிறேன்' என்று முடிப்பார். இருமுறை நம்மை வரவேற்பதில் நமக்குப் பெருமைதானே!

மற்றும் உரையாற்றும் அறிஞர் ஒருவர் மட்டுமே நம்மை வரவேற்கிறார் என்று நாம் மனம் சோர்ந்து விடக்கூடாது என்பதற்காக ஒரு வரவேற்புக் குழுவே அமைத்து விடுகிறார்கள். உரையாற்றுபவர், அக்குழுவின் தலைவர் என்ற முறையில் வருகைதந்து நம்மை வரவேற்கிறார். இந்த வரவேற்புக் குழுவில் உறுப்பினராவதற்கு கட்டணம் உண்டு. வரவேற்புக் குழு நிதி திரட்டிய பிறகு தானே மாநாடு கூட்ட முடியும்!

இவ்வகையிலான பாராட்டு விழாக்கள், வாழ்த்துரைகள், வரவேற்புரைகள், விளம்பரங்கள், ஊர்வலங்கள் போன்ற நடவடிக்கைகளுக்கு செலவிடப்படும் பணத்தின் அளவைக் கருதினால் சமுதாயத்தின் பொருளாதாரம் நிலையில் உள்ளதாகவே தோன்றும். இவ்வாறு செலவாகும் பணத்தில் ஒரு சிறு பகுதியை மிச்சப்படுத்தினால் கூட உணவு உடை போன்ற அவசியத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளலாம் என்று கருதுவோரும் உண்டு. ஆனால் பண்பாட்டுச் சின்னங்களான வாழ்த்துக்களையும், வரவேற்புகளையும் கைவிட்டு, கேவலம் அன்றாட தேவைகளை முக்கியமாக எடுத்துக்கொண்டால் மனித நாகரிகம் எவ்வாறு செழிக்கும்? ஒன்றுமே கிடைக்கவில்லை என்ற ஓலம் ஒலித்துக் கொண்டிருக்கும்போது எங்கு திரும்பினாலும் தவறாமல் கிடைக்கும் வாழ்த்துக்களையும் வரவேற்புகளையும் புறக்கணிக்கலாமா? வாழ்க வாழ்த்துக்கள்! வரவேற்புகளையும் மகிழ்ச்சியுடன் வரவேற்போம். ●

நன்றி: சென்னை வானொலி






ஓர் இனிமையான காலை நேரம் மழை பெய்து கொண்டே இருக்கிறது. ஓயக்காணோம். மழை ஈரம் காயாதால், அழகும் அமைதியும் ஒருசேர, குயில்களின் கூவல் மட்டுமே கேட்டுக் கொண்டிருந்த ஒரு இனிய பத்து மணிப் பொழுது.

அது ஒரு பெரிய லாட்ஜ் !

அதன் ஒரு புறத்தே வரிசையாக பெரிய ரூம்கள் தனிமையான ஒரு லைன் அது. 57-ம் நெம்பர் கடைசி ரூம். அதில் இருப்பது ஒரு சீக்காளி அம்மாவும், ஒன்பது வயதுச் சிறுமி ஒருத்தியும்தான். தகப்பனார் வெளியே புறப் படுகிறார் ''நானும் வரேம்பா, இங்கே விளை யாட யாரும் இல்லை வெறிச்சோன்னு இருக்கு'' என்றாள் குழந்தை ''நான் படக் கம்பெனிக்கு போயிட்டு வர சாயந்திரம் ஆகும்மா. சமத்தோல்லியோ, அம்மா கூடவே இருக்கணும், அம்மாவுக்கு மருந்து ஆரஞ்சு எல்லாம் தரணும்'' என்று சமாதானம் சொல்லிவிட்டு அவர் டாக்ஸியில் புறப்பட்டு விட்டார்

குழந்தை ஒவ்வொரு ரூமாக பார்த்துக் கொண்டே சிறு சிறு 'ஜம்ப்'களாக ஓடுகிறாள். ஒரு ரூமிலாவது ஆட்கள் இல்லை. இந்தக் கடைசியிலிருந்து அந்தக் கடைசி வரை சின்னச் சின்ன குறிகளாகப் போய் வருகிறாள். உதட் டைப் பிதுக்கிக் கொண்டு ஏமாற்றத்துடன் தாயிடம் வருகிறாள். 'என்னம்மா நீயும் படுத்துக்கிட்டே ! அப்பாவும் ஆபீஸ் போயிடறார் ! என்னை இங் கேணச்சும் ஸ்கூல்லே சேர்த்தி யிருக்கலா மில்லையா, பாடமும் கெட்டு, போரும் அடிக்குது' என்று புகார் செய்து அழுகிறாள். தாயின் சமாதானத்தை அலட்சியப்படுத்திக் கொண்டு, பிற்பகல் மணி இரண்டு ஆகிறது எல்லோரும் பகல் தூக்கத் தில் இருக்கும் வேளை. அணிலைத் துரத்திக் கொண்டு இந்தக் குழந்தை மட்டும் மரங்களிடையே ஓடுகிறாள்.

ஒரு டாக்ஸி வந்து நிற்கிறது. 53-ம் நெ. ரூமுக்கு ஆள் வந்திருக் கிறது ஒரு ஐம்பது வயதுக்காரர் ஒரு சின்ன பெட்டியுடன் முதலில் இறங்குகிறார். அவரைத் தொடர்ந்து ஒரு இளம் பெண்–வயது இருபதுக்குள் இருக்கும் — ஹை ஹீல்ஸ் செருப்புடன், சிறிது மேக்கப்புடனும் ஒரு செயற்கையான குதூகலத்துடனும் இறங்கி ரூமுக்குள் அவசரமாகப் போகிறாள். வேறு யாரும் உடன் வரவில்லை டாக்ஸி திரும்பி விட்டது. எதிர்ப்புறம் மரத்தடியில் நின்று கொண்டு இவர்களைப் பார்க்கிறாள் குழந்தை.

தனக்கு பேச்சுத் துணைக்கு ஆள் கிடைத்து விட்டது என்ற மகிழ்ச்சி முகத்தில். உடனே போய் நிற்கலாமா? கொஞ்ச நேரம் போகட் டும் என்று காத்திருந்து, அந்த ரூம் பக்கம் வரு கிறாள். ரூம் பாய் நிற்கிறான்.

**'' ராகவ பிரியன் ''**

''ஏய் பாப்பா, நீ உன் ரூமுக்கு போ. இங்கல்லாம் வரக் கூடாது'' என்று குழந்தை யைத் துரத்துகிறான். குழந்தைக்கு மீண்டும் ஏமாற்றம். ரூம் கதவும் சாத்தியிருக்கிறது. உள்ளே வளை ஒலி, சிரிப்பொலி, இத்யாதி இத்யாதி. குழந்தை அந்த ரூம் பாய்க்கு அழகு காட்டி விட்டு, தன் ரூமுக்குப் போகிறாள்

மணி நான்கு. மறுபடியும் ஒரு வெள் ளோட்டம். நல்ல வேளை. அந்த ரூம்–பாய் இல்லை. எப்படியும் அந்தப் பெண்ணுடன்

பேசி சிநேகம் பிடித்துக்கொள்ள வேண்டும் என்ற தீவிரத்துடன் குழந்தை ஓடி வருகிறாள்.

கையில் ஒரு டேபிள் ரோஸ் பூங்கொத்து ''அக்கா அக்கா'' கதவின் வெளிக்கம்பியைப் பிடித்து ஆட்டிக்கொண்டே கூப்பிடுகிறாள் உள்ளே இருப்பவனுக்கு அதிர்ச்சி. அந்த வயோதிக மைனருககோ, ''இது என்னடா நியூசன்ஸ்? யார் என்று பாரு.'' என்கிறார். கதவு திறக்கிறது. பெண் எட்டிப் பார்க்கிறாள் குழந்தை கையில் பூவுடன் சிரித்த முகத்துடன் நிற்கிறாள்.

''அக்கா பூவு'' என்று கையை நீட்டுகிறாள் பால் வடியும் அந்த முகத்தைப் பார்த்தவுடன் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்து அன்புடன் குழந்தை கையைப் பிடித்து ''யாரும்மா நீ உன் பேர் என்ன'' என்று கேட்கிறாள். ''நான் பக்கத்து ரூமிலே இருக்கிறேன் என் பேர் மகாலட்சுமி'' என்று இனிமையாக, திருத்தமாகக் கூறுகிறாள். பிறகு பற்றிய கையை இழுத்தபடி, ''வெளியே போய் மரத்தடியிலே உட்கார்ந்து பேசலாம் வா, அக்கா'' என்கிறாள். அவளுக்கோ தர்ம சங்கடம். யாருடன் விளையாட வந்தவள், யாருடன் விளையாடப் போவது? நினைப்போடு குபீர் என்று சிரிப்பும் வெடித்தது உள்ளே திரும்பி 'ஏங்க இந்த குழந்தை என்னை விளையாடக் கூப்பிடுதுங்க, போகட்டுமா?'' என்ற குரலில் குறும்பு கொந்தளிக்கக் கேட்கிறாள்.

''ஏய் என்ன இதெல்லாம்? இனிமே கூப்பிடவே மாட்டேன் பார்த்துக்கோ'' என்கிறார் மெல்லிய குரலில் அதட்டியபடி. ''தாத்தா என்ன சொல்றார் அக்கா'' என்கிறது குழந்தை மறுபடியும் குபீர் என்று சிரித்துக் கொண்டே உள்ளே ஓடுகிறாள் அந்தப் பெண்

இதுதான் சாக்கு என்று குழந்தையும் பின்னாடியே அந்த ரூமுக்குள் போகிறாள் பெரிய ஆள் எழுந்து உட்கார்ந்தபடி முகத்தில கோபம் கூத்தாட ''அட, இதென்ன ஏன் இந்த குழந்தையை கூப்பிட்டாரே?'' என்று அதட்டுகிறார். ''நானா கூப்பிட்டேன்? அவதான் தாத்தாவைப் பார்க்கிறேன் என்று உள்ளே வந்துட்டா'', என்கிறாள் நகைத்துக் கொண்டே. அவருக்கு முகம் சாம்பிப் போகிறது இருந்தாலும் சமாளித்துக் கொண்டு தலையைத் துடைத்துக் கொள்கிறார் ''நீ யாரம்மா'' என்று கேட்கிறார்

''என் பேர் மகாலட்சுமி எங்கப்பா படம் வியாபாரம் செய்யற டிஸ்டிரிபூட்டர் அம்மாவுக்கு உடம்பு சரியில்லை இங்கே டாக்டர் வந்து பார்க்கிறார். நான் ஒரே பொண்ணு தான், அதனாலே அம்மாவோடவே தங்கி இருக்கேன். இதோ கடைசி ரூம்தான் எங்களது'' என்று சொல்லிக் கொண்டே, ''வா அக்கா சித்த நேரம் விளையாடலாம்'' என்று கையைப் பிடித்து இழுக்கிறாள். அவர் முகத்தைப் பார்க்கிறாள் அந்தப் பெண். ''கொஞ்ச நேரம் தூங்குங்களேன், நான் அப்படியே மரத்தடியே இவளோட கொஞ்சம் இருந்து விட்டு வருகிறேன்'' என்று சொல்லி விட்டு குழந்தையையும் கூட்டிக் கொண்டு வெளியே வருகிறாள். மாலை மணி 5. ''போதும் நீ அம்மாகிட்டே போ'' என்று சொல்லிவிட்டு அவள் ரூமுக்குள் போகிறாள்

## GODLINESS

—C. Subramanya Bharati.

Whether one goes to temple or not, whether one worships God or not, if cheating others is given up, there will be divine grace.

If a person makes himself perfect by not having an iota of chicanery he gets godhood. We should not cheat even sparrows, crows, worms and ants.

Without pulling others by their legs we must keep afloat on the floods of worldliness like a floatsam with a feeling of philosophic detachment and with a view that everything is a divine dispensation

That man who thus sefflessly reposes everything in the hands of ihe Almighty becomes a God-head.

There is no shadow of doubt.

(Translated from Tamil by V. G. Srinivasan)

''அம்மா, அம்மா ஒரு அக்கா வந்திருக்கு தம்மா அந்த ரூமுக்கு. நல்ல அக்கா என்னேடை இவ்வளவு நேரம் பேசி விளையாடிக்கொண்டிருந்தா அம்மா'' என்று சந்தோஷமாக கூறுகிருள் சிறுமி.

தாயாருக்கும் சந்தோஷம் தான் படுத்த படுக்கையாக இருப்பதால் குழந்தை இப்படி ஏங்கிக்கிடக்கிறதே என்று கவலைப்பட்டதற்கு இந்த சந்தோஷமாவது கிடைக்கிறதே என்று மனம் மகிழ்கிருள். சாயந்திரம் 7 மணி வரை அடிக்கொருதரம் ''அக்கா அக்கா'' என்று கூப்பிட்டுக்கொண்டே ஏதாவது தின்பண்டம். பூ இப்படி கையில் வைத்துக்கொண்டு அந்தப் பெண்ணைப் போய் கூப்பிட்டபடி இருக்கிருள்

''ஏன் கோபித்துக் கொள்கிறீர்கள். அது ஏதோ பாவம், தனியாக இருந்து சலிப்பு கொஞ்ச நேரம் அதோட பேசறதாலே என்ன நஷ்டம்?'' என்று அவரிடம் சமாதானம் சொல்லிவிட்டு, அவளும் குழந்தையுடன் முன்புற வெராண்டாவில் உட்கார்ந்து கதை பேசுகிருள்.

7-30 மணி சுமாருக்கு டாக்ஸி ஒன்று வருகிறது கடைசி ரூமுக்கு முன் நிற்கிறது. குழந்தையின் தகப்பனர், 'மகாலட்சுமி' என்று குரல் கொடுத்துக் கொண்டே உள்ளே போகிருர்.

''குழந்தை எங்கோ பக்கத்து ரூமில் இருக்கிருள். அங்கே யாரோ சினேகம் பிடித்துக் கொண்டாள் போலிருக்கிறது'' என்று தாயார் கூறுகிருள்

''மகாலட்சுமி மகாலட்சுமி'' என்று குரல் கொடுத்துக்கொண்டே ஒவ்வோர் ரூமாக வருகிருர்.

'அப்பா இங்கே இருக்கிறேன்' என்று சப்தமிடுகிருள் குழந்தை. அத்துடன் அந்தப் பெண்ணின் கையைப் பிடித்துக்கொண்டே 'இந்த அக்காகூட பேசிட்டிருந்தேம்ப்பா!' என்கிருள்.

தந்தை அந்தப் பெண்ணைப் பார்க்கிருர் அனுபவஸ்தர் ஆயிற்றே! அவள் யார் என்பதைத் தெரிந்து கொள்கிருர்.

''சரி, சரி வா'' என்று சற்று கோபமாக குழந்தையின் கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு போகிருர்.

''ஏனுங்க அப்படி இழுத்துக்கிட்டு வர்ரீங்க?'' என்று பதறிப்போய் கேட்கிருள் தாய்

''கண்டபக்கமெல்லாம் ஏன் குழந்தையை அனுப்பறே'' என்று கடிந்துவிட்டு அவர்தன் வேலையைப் பார்க்கிருர்.

''ஏனுங்க அது யாருங்க? இதுதான் அக்கா அக்கான்னு உக்காந்திடுச்சு நானும் போயா பாக்க முடியும்? ஏனுங்க என்ன?'' என்று திரும்பவும் வினவுகிருள்.

''புரியல்லியா?... இங்கே வந்து தங்கறது எல்லாருமே நம்ம மாதிரி தாலி கட்டின புருஷன், பெண்டாட்டின்னு நினேச்சிக்கிட்டிருக்கிறியா?'' என்ருர் அவர்.

''அப்படியா சங்கதி?'' என்று பரபரத்து

விட்டாள் தாய். "அங்கே எல்லாமா இவ போறு? கெட்டுத்தே குடி!... ஏ கழுதே, வா இங்கே... தோலே உரிக்கிறேன், பாரு..." என்று கத்துகிறுள்.

"சரி, சரி விடு... அது என்னத்தைக் கண்டுது? இனிமே அந்தப் பக்கம் போகாமல் பாத்துக்க", என்கிறுர் தந்தை.

விடியற் காலே மணி ஆறரை. 53ம் நம்பர் ரூம் காலியாகிறது.

கள்ளப்பார்வை பார்த்துக் கொண்டு அந்தப் பக்கம் வந்த மகாலட்சுமிக்கு ஏமாற்றம் அக்கா புறப்பட்டுட்டாங்களே! ஏன் இவ்வளவு சீக்கிரம் கிளம்பிட்டாங்க?

"வாம்மா, மகாலட்சுமி... எங்கே உன்னே அப்புறம் காணவே காணேம்?" என்று கேட்கிறுள் பெண், உண்மையான ஆதுரத்துடன்.

டேபிள் ரோஸைக் கொடுத்து விட்டு சிறுமி உதட்டைக் கடிக்கிறுள் விம்மலே அடக்க முடியாமல்.

"அட, ஏம்மா அழுவறே?"

"உங்க கிட்ட பேசக் கூடாதாம், அக்கா... அப்பாவும் அம்மாவும சத்தம் போடறுங்க... இப்ப கூட அவங்களுக்குத் தெரியாமத்தான் வந்திருக்கேன், அக்கா..."

டேபிள் ரோஸ் குலுங்குகிறது பனித்துளிகளாய் அதில் கண்ணீர் விழுகிறது.

"நீங்க ஏன் அக்கா அழுவறீங்க?... நான் ஒன்னும் பயந்து போய் வராம இருக்க மாட்டேன்... அப்பா வெளியே போயிட்டதும், வந்துடறேன்க்கா."

"மகாலட்சுமி" குழந்தையை வாரி அணைக்கிறுள் யுவதி. டேபிள் ரோஸ், நைலான் புடவை, பேபி ப்ராக் எல்லாமே குலுங்குகிறது.

"ஊருக்கா போறீங்க, அக்கா"

"ஆமாம்மா"

"எப்ப வருவீங்க?"

"வர்ரேண்டா கண்ணு... நிச்சயமா வர்ரேண்டா...

மகாலட்சுமி... கோவிச்சுக்காதேம்மா உன் அப்பா, அம்மா சொல்றபடிக் கேளுடா, கண்ணு... நீ நல்ல பொண் இல்லே?' செயற்கை உற்சாகத்துடன் உதடு சிரிக்க, உள்ளம் அழ, 'டாடா' என்று விடை பெறுகிறுள் பெண்.

டாக்சி புறப்படுகிறது

அது வளைந்து, காம்பவுண்டுக் கதவை ஒரு ஒடி ஒடித்துக் கொண்டு போவதையே வெறித்துப் பார்த்துவிட்டுத் திரும்பும்போது, காலில் ஏதோ சுருக்கென்று குத்தவே, குனிகிறுள் மகாலட்சுமி டேபிள் ரோஸ் கொத்தின் தண்டிலே இருந்த முள்!

"அக்கா... அக்கா... பூவை விட்டுட்டுப் போறீங்களே!" அவள் ஓடுகிறுள் வாயிலுக்கு.

தெரு வெறிச்சோடிக் கிடக்கிறது. ●

# THE IMPORTANCE OF MEDITATION

—✱ C. SUBRAMANYA BHARATI ✱—

The power of meditation need not be belittled. Man becomes what he desires to become. We call meditation that supreme desire which dazzles as the Primal Light which consumes all mental cares and hankerings as the wild fire the thickets.

If such a fire is kept in mind all the worldly things get transmuted as those germane to our mental level.

Meditation is necessary for theists, atheists, religionists and non-religionists alike.

In Bharata Desa good meditation is more essential than food, particularly nowadays.

You may even forego your food, but never fail to meditate, sitting in a sequestered spot and filling your intellect with noble, useful and peace emanating thoughts — thoughts which charge you with courage and firmness

The God - fearing and the devout should pray to their chosen deity with a true and devotion—thirsty heart and with concentration.

Muttering an old myth can be of no avail. Prayer should spring from the innermost recess of your heart.

That soul — merged meditation will serve well, if your thoughts are couched in your mother tongue.

Even an atheist, having no chosen deity, can meditate emptily, for good.

'Let thoughts be always great and grand' *(உள்ளுவ வெல்லாம் உயர்வுள்ளல்)* says the Kural. Meditate with an all — consuming passion. Never allow despairing and discouraging thoughts to get in

Pure and unclouded intellect and moral courage and strength will surge forth ever new and ever on in your mind like a gushing fountain

Your wishful thoughts will get fructified. This is true. You may taste it yourself.

(Translated from Tamil by V. G. Srinivasan.) ●

ம. ந. ராமசாமி

கூடை நாற்காலியைப் போட்டுக்கொண்டு ராதா வெளிப்புறம் உட்கார்ந்திருந்தாள். அவள் உள்ளம் வெறிச்சோடிக் கிடக்கிறது. அந்த மாலை நேரத்தில் தோட்டத்தில் மலர்ந்துள்ள மல்லிகை மலர்களின் மணம்கூட அவளுக்குத் தெம்பு அளிப்பதாக இல்லை சிமெண்ட் தரை எங்கும் தெளித்த நீர் பகல் நேரச்சூட்டில் ஆவியாக, லேசாக அனல் எழுந்து கொண்டிருக்கிறது.

அம்மா உள்ளே தோசைக்கு அரைத்துக் கொண்டிருக்கிருள். ''நான் தள்ளிக் கொடுக்க வா, அம்மா?'' என்று கேட்டதற்கு. நிமிராமலே ''வேணும் நான் பார்த்துக்கறேன்'' என்று விட்டேர்த்தியாகக் கூறிவிட்டாள். சரி, உட்காரேன் என்று சொல்லி இருந்தால், மனதுக்கு இதமாக இருந்திருக்கும்.

வீட்டில் எல்லோருமே ஒரு மாதிரியாகத் தான் நடந்து கொள்கிருர்கள். எத்தனை ஆசையோடு அவள் பிறந்த வீட்டுக்கு வந்தாள்? அந்த ஆசை அவ்வளவையும் அவளுடைய அம்மா, அப்பா, அண்ணு, தம்பி தங்கை அனைவரும் அனைவரும் தள்ளி, மிதித்துத் தேய்த்து நாசப்படுத்திவிட்டார்கள். இப்படி நேரும் என்று தெரிந்திருந்தால், அவள் வந்திருக்கவே மாட்டாள். அவளுடைய கணவன் வாசுதேவன் சொன்னன், 'ராதா இப்ப போகவேணும் உன்னை உன் அம்மாவோ, அப்பாவோ வரச் சொல்லி எழுதவில்லை. அவர்கள் வந்து உன்னைப் பார்த்து விட்டுப் போய் ஒரு மாசம்தான் ஆகிறது.''

''அவர்கள் வரச்சொல்லித் தான் நான் போகவேணுமா? திடீர் என்று போய் நின்று அவர்களை ஆச்சரியத்தில் மூழ்கடிக்கப் போகிறேன்'' என்ருள் ராதா கணவனிடம்.

''சரி, உன் விருப்பம்'' என்று கூறி அவளைப் பிரிவதற்கு மனம் இல்லாமல், ரயிலில் ஏற்றி வண்டி புறப்படும்போது, கையை இறுக அழுத்தினன் வாசுதேவன்.

வில்லி மலர்கள் போன்ற தனது நீண்ட வலது கை விரல்களை அவள் பார்த்துக் கொண்டாள் நேற்று இரவு ரயில் புறப்படும்போது வாசுதேவன் அழுத்தியதன் வலி இன்னும் நமநம வென்று கையுள் இருப்பதை உணர முடிகிறது. அப்படி உணர்வது உள்ளத்துக்கு இன்பம் அளிப்பதாக இருக்கிறது.

கணவனை நினைத்துக் கொள்ளும்போது, அவளது மார்பினுள் இதயம் துள்ளுகிறது, அவனுடைய உருவத்தை மனத்திரையுள்



படமாக நிறுத்த முயன்ருள் அவள். முடிய வில்லை நினைத்து, மனம் குளிரப் பார்க்க முயன் ருல் கூட, அவன் உருவம் மங்கலாக, அமெச் சூர் புகைப்படக்காரர் எடுத்த படம் போலத் தெளிவற்றுத் தெரிகிறது ஆசைமுகம் மறக்கும் என்பது இப்படித் தானே? அடுத்த தடவை கணவனைத் தனிமையில் சந்திக்கும் போது, அருகில், மிக அருகில் முகத்தை வைத்துக் கொண்டு, ஓர் ஐந்து நிமிஷ நேரம் கண்களைக் கொட்டாமல் முகத்தை நன்ருகப் பதிவு செய்து கொள்ள வேண்டும் என்று எண்ணிக் கொண் டாள்.

கையில் சிறு பிளாஸ்டிக் பையுடன் அவள் இன்று காலை ரயிலில் இருந்து இறங்கினுள். வண்டிக்காரர்கள் அவளைச்சூழ்ந்து கொண்டார் கள். வண்டி வேண்டாம் என்று கூறி அவள் நடந்தாள். சில வண்டிக்காரர்கள் தொடர்ந்து வந்தார்கள் இரண்டு பேர்கள் அவளைச் சும்மா ஏற்றிக் கொண்டு போகிறேம் என்று கூடச் சொன்னுர்கள். அவள் மறுத்து விட்டாள். அவர்களில் பலரைப் பெயர் சொல்லி அழைக் கும் அளவுக்குப் பழக்கம் உண்டு. இதே ஊரில் பிறந்து, வளர்ந்தவள் அவள்.

அவள் நடந்தாள். எந்த மண்ணோடு தனக்கு இருந்த உறவு தீர்ந்துவிட்டது என்று நினைத்தாளோ, அந்த நினைப்பை மறந்து அதே மண்ணை மீண்டும் அவள் மிதித்தாள். அந்த மண்ணை மிதித்து நடந்து செல்ல விரும்பினுள். கையிலிருந்த பை கனக்க வில்லை. பழைய சேலைகள், ஜாக்கெட்டுகள் பிறந்த வீட்டில் இருக்கின்றன. சீராடும் நாட்களுக்கு அவை போதும்.

ரயில்வே ஸ்டேஷனிலிருந்து வீடு 1 கிலோ மீட்டர் தூரம், அவள் நடந்தாள். சாலையின் இருபுறமும் தோட்டங்கள் தோட்டங்களில் இளம் மரங்கள் தளிர்களை விட்டுக் குலுங்கு கின்றன. பறவை இனங்களின் கூச்சல். வானில் சூரியனைக் காணவில்லை மேகங்கள் போர்த்தி இருக்கின்றன.

ஓசைப் படுத்தாமல் கேட்டைத் திறந்து கொண்டு வீட்டினுள் அவள் நுழைந்தாள். பாத்ரூமிலிருந்து வரும் சப்தத்தில், அப்பா பல் விளக்கிக் கொண்டிருப்பது புரிகிறது. தம்பியும், தங்கையும் படுக்கையில் கால்மாடு, தலைமாடா கக் கிடக்கிருர்கள். செருப்புகளை ஒரு மூலையில் கழற்றி விட்டு, கூடத்தைக் கடந்து சமையலறை யுள் நுழைத்த போது, நிமிர்ந்த அம்மா சற்று திடுக்கிட்டாள்.

"நீ யாடி? இப்படிச் சொல்லாமல் கொள் ளாமல் திடும்னு வந்து நிக்கறியே?" என்ருள் அம்மா காபி கலந்தபடி.

'உன்னைப் பார்க்கணும்னு தோணித்து உடனே புறப்பட்டு வந்துட்டேன்!" என்ருள் அவள் ஒரு குழந்தையின் குதூகலத்துடன்.

"உம்... ... ... மாப்பிள்ளை சௌக்கியமா இருக்காரோலியோ?"

"இருக்கார்"

அவள் நின்று கொண்டிருந்தாள் அம்மா அவளை உட்காரச் சொல்லவில்லை. காபி கலப்ப தில் கவனமாக இருந்தாள். "நீ விச்சா இருக் கியா;" என்று ஒரு வார்த்தை அம்மா கேட்க வில்லை தாயின் பரிவில் விரிசல் கண்டிருப் பதை அவள் உணர்த்தாள்

கையிலிருந்த துண்டால் முகத்தைத் துடைத்தபடி அப்பா வந்தார்.

''யாரு, ராதாவா? எப்போ வந்தே?'' அவர் கேட்டார்.

''இப்பத்தான் வந்துண்டே இருக்கேன், அப்பா! அம்மா, அப்பா ரெண்டு பேரும் இப்படி நில்லுங்கோ, நமஸ்காரம் பண்ண றேன்!''

அம்மா கைக் காரியத்தை விட்டு எழுந்து, அப்பா அருகில் நின்றாள். அவள் முழங்கால்கள் மடக்கி விழுந்து, நெற்றி தரையில் பட, விழுந்து வணங்கி, எழுந்து நின்றாள். ''தீர்க்க சுமங்கலியா இரு'' என்று இருவரும் வாழ்த்தினார்கள்.

தன்னைக் கண்டதும் அப்பா அருகில் நெருங்கி, மெதுவாக அணைத்துக் கொள்வார் என்று அவள் எதிர்பார்த்தாள். அவருடைய செல்லப்பெண் அவள் அவர் விலகி நிற்பது அவளுக்கு மாற்றமாகப்பட்டது. தீர்க்க சுமங்கலியாக இரு என்று தாயும், தந்தையும் கூறியது கூட வழக்கமான ஆசீர்வாதமாகப் பட்டதே தவிர, மனதின் ஆழத்திலிருந்து பாச பூர்வமாக எழுந்த வாழ்த்தாக அவள் உணர வில்லை

அம்மா டவரா, டம்ளருடன் காபியைக் கொடுத்தாள் அந்தக் காலை நேரத்திலும், அக்டோபர் மாதத்தில் சமையல் அறை புழுங்கி யது கையில் காபியுடன் அவள் வெளியே வந்தாள். அறைக்கு வெளியே நின்று காபியை ஆற்றும் போது, சமையல் அறையில் பேச்சுக் குரல் கேட்டது

''பொண்ணு எங்கே வந்திருக்கா இப்போ?'' அப்பா கேட்கிறார்.

''எதுக்காக வந்திருக்காள்னு தெரியல்லே!'' அம்மா சொல்கிறாள்.

'மாப்பிள்ளையோட சண்டை போட்டுண்டு வந்திருப்பாளோ?''

''தெரியல்லே. மெதுவாத்தான் விசாரிக்கணும்!''

அவள் ஓசைப்படுத்தாமல் அந்த இடத்தை விட்டு நகர்ந்தாள். கூடத்து சோஃபாவில் அமர்ந்து, எதிரே இருந்த டீப்பாயின் மீது காபி டம்ளர், டவராவை வைத்தாள். காபியைச் சாப்பிட பிடிக்கவில்லை. அவள் எதிர்பார்த்து வந்தது என்ன, கிடைத்த வரவேற்பு எதிர் மாறாக அல்லவா இருக்கிறது!

யோசித்தபடி அவள் உட்கார்ந்திருந்தாள். நெஞ்சில் கொள்ளை ஆசையுடன் பிறந்த வீட்டுக்கு அவள் வந்த வேகமும். கிடைக்கும் வரவேற்புச் சவரணையும் பொருத்தமில்லாமல் அல்லவா இருக்கிறது.

''ராதா, காபி ஆறிப்போறதே, சாப்பிடு'' நின்று சொல்லிவிட்டு நகர்ந்தார் அப்பா.

அவள் டம்ளரைக் கையில் எடுத்தாள். காபியை அருந்திவிட்டு டம்ளரை டீப்பாய் மீது வைத்த போது, அவளுடைய அண்ணன் கையில் டென்னிஸ் ராக்கெட்டுடன், ஷார்ட்ஸும், பனியனும் அணிந்து புயலாக வீட்டினுள் வந்தான்.

நின்று. ''ஹலோ, ராதா!'' என்றவன் எப்போது வந்தாய் என்று கூடக் கேட்காமல், நேராக மாடிப்படி தாவி தன் அறைக்குச் சென்றான்.

அதே சமயம் தங்கை லல்லி படுக்கையிலி ருந்து எழுந்து வந்தாள். வந்தவள் தன்னைக் கண்டதும், 'அக்கா!' என்று கூவி ஓடி வந்து கட்டிக்கொள்வாள் என்று எதிர்பார்த்த வளுக்கு, தங்கையிடமும் ஏமாற்றம்தான் மிஞ்சியது. தூக்கக் கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு, லல்லி பேசாமடந்தையாக நின்று இவளை நோக்கினாள்

'வா. லல்லி!' என்றாள் அவள் இருகைகளை யும் நீட்டியபடி.

'' இரு, அக்கா! பல் தேச்சுட்டு வரேன்! '' லல்லி நகர்ந்தாள்.

கல்லூரிப்படிப்பை முடித்துக்கொண்டதும் வீட்டில் லல்லி, ரமேஷ் இருவரையும் கட்டி மேய்ப்பதற்கே இவளுக்கு நேரம் சரியாக இருக் கும். தங்கை, தம்பி மீது அவளுக்கு வாஞ்சை அதிகம். விதவிதமாக அவர்களுக்கு உடை களைப் பார்த்துப் பார்த்துத் தைப்பதிலிருந்து, பாடம் சொல்லிக் கொடுப்பது, தலைவாரிவிடு வது, ஆடை அணிவிப்பது, வாரம் ஒரு முறை எண்ணெய் தேய்த்து விடுவது என்று இருவரை யும் அவள் தான் கவனித்துக் கொண்டிருந் தாள்.

அவளுடைய கல்யாணத்துகான ஏற்பாடு கள் நடந்து கொண்டிருந்தபோது கூட, அம்மா ''நீ புக்ககம் போய் விட்டால், இந்த ரெண்டு கொரங்குகளையும் வச்சுண்டு நான் எப்படித் நாளைத் தள்ளப் போறேனோ!'' என்று அடிக்கடி கூறுவது வழக்கம்.

மணமாகி, கணவனுடன் சென்ற பிறகு அடிக்கடி தங்கையையும், தம்பியையும் அவள் நினைத்துக் கொள்வாள். லல்லி நடந்து கொள் வதைப் பார்த்தால், இவள் இங்கு இல்லாததை அவள் உணர்ந்ததாகவே தோன்றவில்லை.

சோம்பல் முறித்தபடி ரமேஷ் வந்தான்.

''அட, ரமேஷ்! ஓடியா ! அக்கா வந்திருக் கேன்'' என்று கூவி இருகைகளையும் அவனை நோக்கி நீட்டினாள் அவள். குரல் சற்று கிரீச் சென்று தொண்டையிலிருந்து வெளிவந்தது.

அவன் நிமிர்ந்து நோக்கினான்.

''அம்மா எங்கே?'' அவன் கேட்டான்.

''சமையல் அறையில் இருக்கா''

''கார்த்தாலே சீக்கிரமா எழுப்பிவிடச் சொன்னேன், இந்த அம்மா எழுப்பி விடல்லே. ஸ்கூல் போர்ட்ஸ்லே சேர்ந்திருக்கேன். பிராக் டிஸ் பண்ணனும். வரச்சொல்லி இருக்காங்க. அம்மா தெனமும் எழுப்பி விட மறந்துடறா'' என்று கூறி தொம் தொம் என்று குதித்து விட்டு, அவள் சமையல் அறையை நோக்கி நடந்தாள்.

அப்பா முதல் இந்த ரமேஷ் வரை யாரும் இந்த வீட்டில் அவளை மதிப்பதாக இல்லை. ஏன் ? உறவுகள் அறுந்து விட்டனவோ ?

திருமண தினத்துக்கு மறுநாள், கணவனுடன் அவளை வழி அனுப்ப ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. அப்பா, அம்மா, அண்ணு, லல்லி, ரமேஷ் அனைவரும் உணர்ச்சி வசப்பட்டிருக்கிறார்கள். அழுது கண்கள் சிவந்திருக்கின்றன. அவளுக்கும் அழுகை மடை திறந்தார் போல வருகிறது. கண்களிலிருந்து நீர் கொட்டுகிறது. பிரிவுத் துயரம் அது. ஆண்டு ஆண்டுகளாய் ஒட்டி ஒட்டி வளர்ந்தவளை ஒருவனுடன் கூட்டி அனுப்பும் போது இனி என்றுமே திரும்பப் பெற முடியாதது போல, பறி கொடுத்துவிட்டார் போல அனைவரும் அழுகிறார்கள். இப்படி இவர்கள் அழுவதைக் கண்டு, திருமணத்துக்காக வந்திருக்கும் சுற்றத்தார்களும் கண்களைத் துடைத்துக் கொள்கிறார்கள். வளர்த்தவர்களிடமிருந்தும், உடன் வளர்ந்தவர்களிடமிருந்தும் உறவை அறுத்துக் கொண்டு, நேற்றுக் கைப் பிடித்த முன் பின் தெரியாதவன் ஒருவனுடன் செல்லப் போகிறோம் என்பதை நினைத்த பொழுது, அவளுக்கும் அழுகை குமுறிக் கொண்டு வந்தது. உற்றார்களும், உறவினர்களும், நண்பர்களும் ஒவ்வொருவரையும் சமாதானப் படுத்துகின்றனர் கட்டுச் சாதக் கூடைகள் சூழ, அவள் கணவன் உட்கார்ந்து கொண்டு, தரையை நோக்கியபடி, விரல் நகத்தால் தரையைக் கீறியபடி இருக்கிறான். அவனைப் பார்க்கையில், அவளுக்குக் கோபம் கூட வருகிறது. இவரால்த்தாலே இத்தனை பிரிவுத் துயரை அனுபவிக்க நேர்ந்திருக்கிறது!

இப்போது நினைத்துப் பார்த்தால், அந்த அழுகை, துயரம், கண்களில் சிவப்பு, மூக்கைச் சிந்தல் யாவும் வேஷம் போலப் படுகிறது. அப்படிக் குமுறிக் குமுறி அன்று அழுதவர்களா இப்பொழுது உறவு அற்றவர்களாக நடந்து கொள்கின்றனர்?

அந்தக் காலை நேரத்தில், அவரவர்கள் தங்கள் தங்கள் அலுவல்களைக் கவனித்தனர். அப்பா குளித்துவிட்டு, பூஜை மணியை ஆட்டிய பிறகு, சாப்பிட்டுவிட்டு அலுவலகம் சென்றார். அண்ணு அவனுடைய அலுவலகத்துக்குப் போனான். லல்லி, "அக்கா, பின்னி விடறயா?" என்று கேட்டு சீப்பை எடுத்துக் கொண்டு வந்து அவள் முன்னே நிற்கவில்லை. பென்சிலைக் காணோம், புஸ்தகத்தைக் காணோம் என்று குதித்துக் கொண்டு ரமேஷ் லல்லியுடன் சண்டைக்குச் சென்றான்

அவளுக்கு எரிச்சலாக இருந்தது. அருகில் மேஜை மீது இருந்த வாரப் பத்திரிகை எடுத்து, சோஃபாவில் படுத்து, பத்திரிகையின் பக்கங்களில் கண்களை ஓட்டினாள். தூக்கம் வந்தது.

அம்மா குளிக்கச் சொன்னபோது, குளித்து விட்டு வந்தாள். சாப்பிட அழைத்த போது சாப்பிடப் போனாள். கூட உட்கார்த்தி வைத்துக் கொண்டு அம்மா சாப்பிட்டிருக்கலாம், அவளை உட்கார வைத்துப் பரிமாறி, அவள் சாப்பிட்டு எழுந்த பிறகு அம்மா சாப்பிட உட்கார்ந்தாள் சாப்பிட்ட சுருக்கோடு, பாயை விரித்து, மின் விசிறியைச் சுழல விட்டு, படுத்து மீண்டும் உறங்கினாள்.

மாலையில் எழுந்தாள். மணி நான்கு ஆகி இருந்தது. காபி போட்டு மூடி தயாராக வைத்திருந்தாள் அம்மா. அதைக் குடித்து விட்டு, வீட்டைச் சுற்றி இருந்த தோட்டத்தை

இரு தடவை சுற்றி வந்தாள். பூக்கள் செடி கொடிகளில் மலர்ந்திருந்தன. கத்தரியும், வெண்டையும் பிஞ்சு விட்டிருந்தன. மாமரம் இளம் தளிர்களுடன் அசைந்து ஆடியது. நான்கு வாளித்தண்ணீரை அவள் தோட்டத்தில் ஊற்றினுள். மனம் சுற்று லேசானதாகப் பட்டது. கூடை நாற்காலியை வாசலில் போட்டுச் சாய்ந்து உட்கார்ந்து, கால்களை நீட்டிக் கொண்டாள்.

அப்பா, அண்ணு இருவரும் அலுவலத்திலிருந்து திரும்பி, சிற்றுண்டி காபி சாப்பிட்டு விட்டுக் கிளப்புக்குப் போய்விட்டார்கள். போகும்போது அண்ணு மட்டும், ''ஹலோ ராதா, வாசுதேவன் எப்படி இருக்கான்?'' என்று கேட்டுவிட்டு ஓடினுன். அவளது கணவனை இவன் தன் வீட்டு மாட்டுக்காரனுக எண்ணுவதாக அவள் நினைத்துக் கொண்டு பொருமினுள்.

லல்லி, ரமேஷ் இருவரும் பள்ளியிலிருந்து திரும்பி விளையாடப் போய் விட்டார்கள். உள்ளே தனியாகத் தோசைக்கு மாவு அரைத்துக் கொண்டிருக்கும் அம்மா எப்போது காரியங்களை முடித்துவிட்டு, வாசல் பக்கம் வருவாளோ, தெரியாது.

மாலை மங்கி, இருட்டு கவிகிறது. தெரு விளக்குகள் எரியத் தொடங்கி விட்டன. வீட்டினுள் யாரும் இன்னும் விளக்குகள் போட வில்லை

வானத்தை நோக்கினுன் அவள். வியூகம் வகுத்த கொக்குக் கூட்டம் இருப்பிடத்துக்குத் திரும்பிக்கொண்டிருந்தது.

அவள் வாசுதேவனை நினைத்துக் கொண்டாள். அப்படி நினைத்த மாத்திரத்தில் உடல் ஒரு சுற்று பருத்து அடங்கினுற் போல மனதுள் படுகிறது. இந்த விநாடி, நினைத்த மாத்திரத்தில் அவன் அருகில் இருக்க மாட்டோமா, அவனுடைய அணைப்பில் லயித்து, கிறங்கிப் போக மாட்டோமா என்று இருக்கிறது. பெற்றோர்கள் இத்தனை ஆண்டுகள் வளர்த்தார்களே, உடன் பிறந்தவர்கள், இத்தனை ஆண்டுகள் பழகினுர்களே, அவர்கள் காட்டாத அளவுக்கு வாசுதேவன் அவள் மீது அன்பைப் பொழிகிறுன்

அவனை நினைக்கும்போதே உள்ளம் பூரிக்கிறது நாள் முழுதும் அவனையே எண்ணியபடி உட்கார்ந்திருக்கலாம் என்று தோன்றுகிறது அவனுக்கு இந்த கிளப், விளையாட்டு என்ற வழக்கம் எல்லாம் கிடையாது. அலுவலகத்திலிருந்து நேராக வீட்டுக்கு வருவான். தோட்டத்தைக் கொத்தி புதுவிதைகளைத் தூவுவான். செடிகளை மாற்றி நடுவான். அவள் உடன் இருக்கும் போது, அவனுக்குத் தேவையான தோட்டக் கருவிகளை வைத்துக்கொண்டு, ஆபரேஷன் தியேட்டர் நர்ஸ் போல அவள் அவன் அருகில் இருந்து கொண்டு தேவையான கருவிகளை எடுத்துக் கொடுப்பாள். பூவாளியில் தண்ணீர் ஊற்றுவாள். அவன் கைகளைக் கழுவ நீர் ஊற்றுவாள்.

அந்தக் கூடை நாற்காலியுள் அவளது உடல் நெளிந்தது. இந்த நேரத்தில் தான்

இப்படி ஆதரவு இல்லாதவளாக ஆகிவிட்டோமே என்று உள்ளம் ஏங்கியது. மகேந்திர ஜாலம் ஏதாவது பண்ணி, திடும் என்று வீட்டின் எதிரே இறங்கி, கணவனது கைகளுக்குள் அடங்கிவிடமாட்டோமா என்று இருக்கிறது.

மீண்டும் அவள் வாசுதேவனை நினைத்துக் கொண்டாள். அவள் இருதயம் ஒரு துடிப்பை மறந்து, மீண்டும் இயங்குகிறது. ஆண்களில் அழகன் அவன். மற்ற ஆண்கள் அவன் அளவு தங்கள் மனைவிமார்களிடம் அன்பு கொண்டிருப்பார்களா என்பது அவளுக்கு சந்தேகம்தான்.

நினைத்துக் கொண்டால், அவன் புறப்பட்டு இங்கு வர முடியும். எக்ஸ்பிரஸ் பஸ்கள்தான் இப்பொழுது ந டு முழுதும் நினைத்தபடி ஓடுகின்றனவே! இன்று காலை புறப்பட்டிருந்தால் கூட இந்த நேரத்தில் இங்கு வந்துவிடலாம்.

அவள் கற்பனை பண்ணினாள். கையில் ஒரு சிறு பெட்டியுடன் அவள் கணவன் வீட்டை பூட்டிக்கொண்டு கிளம்புகிறான். வேஷ்டி, சட்டை தான். பாண்ட் போடவில்லை பலரைப் போல, வெளியே செல்லும் போதெல்லாம் பாண்ட் போட்டுக்கொள்வது அவனுடைய வழக்கம் இல்லை.

பெட்டியுடன் அவசரமாக நடக்கிறான். தெருவில் யாரோ நின்று என்னவோ கேட்கிறார்கள், அவன் போய்க் கொண்டே பதில் சொல்கிறான். பஸ் பிடித்து அவன் சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட் செல்ல வேண்டும். பஸ்ஸுக்காகக் காத்திருக்கிறான். பதினேழு வருவதாக இல்லை. இந்தப் பதினேழு, நுங்கம்பாக்கம், எழும்பூர், சென்ட்ரல் என்று ஊர்வலமாகச் செல்வதற்குள், காலம் கடந்துவிடும்.

வாசுதேவன் சாலையில் ஓடிக்கொண்டிருக்கும் ஆட்டோ ரிக்ஷா ஒன்றை நிறுத்துகிறான். அவன் ஏறியவுடன் அது விரைகிறது.

திருச்சிராப்பள்ளி செல்லும் பஸ் எஞ்சின் உறுமிக் கொண்டிருக்க, நிற்கிறது. வாசுதேவன் பஸ்ஸை நோக்கி ஓடுகிறான். கண்டக்டர் கதவைத் திறக்க, அவன் உள்ளே தாவுகிறான்.

பஸ் புறப்படுகிறது. உயர்நீதி மன்றத்தை வலம் வருகிறது. கோட்டை ஸ்டேஷனைத்

தாண்டி, மவுண்ட் ரோடு பக்கமாக வாராவதியில் திரும்புகிறது. இதோ மன்ரோ சிலை. அவனுடைய மன வேகத்துக்கு ஈடாக, டிரைவர் பஸ்ஸைச் செலுத்துகிறான். சிக்னல்கள் நல்ல காலமாக பச்சை ஒளியைக் காட்டுகின்றன. எங்கும் நிற்காமல் பஸ் வருகிறது. கால்களை நீட்டியவாறு ஸீட்டில் சாந்து உட்கார்ந்திருக்கிறான் வாசுதேவன். அவன் மனமும் அவளைப் பற்றியே எண்ணிக்கொண்டிருக்கிறது.

ஊர் வந்து விட்டது. பஸ் நிற்கிறது. வாசுதேவன் மட்டும் இறங்குகிறான். அவனை இறக்கி விட்டு விட்டு, பஸ் செல்கிறது.

அவன் நடக்கிறான். 'பூ வாங்கிட்டுப் போங்க!' பூக்காரர்கள் அவனைத் துரத்துகிறார்கள். 'பழம் வாங்கிட்டுப் போங்க!' ஒரு பழக் கூடைக்காரி அவனுடன் கூட நடக்கிறாள். அவர்களை லட்சியம் செய்யாமல் அவன் வருகிறான். அவளைக் காண வேண்டும், கண்டு தன் விரிந்த கைகளிடையே அவளை மார்போடு சேர்த்து அடக்கி விட வேண்டும் என்ற துடிப்பில் அவன் வந்து கொண்டிருக்கிறான்

இதோ இந்தத் தெருக் கோடியில் அவன் திரும்பி விட்டான். நடையின் வேகம் அதிகரிக்கிறது. புஸ், புஸ் என்று மூச்சு இரைக்க, ஓடி வராத குறையாக நடந்து வருகிறான்.

இதோ இங்கிருந்து இருபத்தைந்து அடி தூரத்தில் இருக்கிறாள். அவனுக்கும் அவளுக்கும் இடையே உள்ள தூரம் விநாடிக்கு விநாடி குறைகிறது. அப்பப்பா, என்ன வேகம், என்ன வேகம்.]

அவள் கண்களை மூடி இருக்கிறாள். கேட் அருகில் அவன் நின்று, கதவுகளைத் திறக்கும் போது ஓசை கேட்கும். அப்போது கூட கண்களைத் திறக்க மாட்டாள். அவன் மெதுவாக, ஓசையின்றி அவள் அருகில் வருவான். வந்து அவளது காது அருகில், குனிந்து, ''ராதா!'' என்று கூப்பிடுவான். அப்போதும் அவள் கண் விழிக்க மாட்டாள்.

நெற்றியில் யாரோ கை வைக்கிறார்கள்.

''ஐயோ. நெருப்பாக் கொதிக்கிறதே!'' அம்மா சொல்கிறாள்.

அவள் கண்களைத் திறக்கிறாள். ஜிவு, ஜிவு என்று கண்கள் எரிகின்றன. அவள் எழுந்து, ''அம்மா!'' என்று கதறி, தாயைக் கட்டிக் கொள்கிறாள்.

கேட் பக்கம் செருப்புகளின் ஓசை கேட்கிறது. கதவுகள் திறக்கும் ஓசை.

''மாப்பிள்ளை யடீ!'' என்கிறாள் அம்மா.

தாயைப் பற்றியபடி நின்றிருந்த அவள் கண்களைத் திறந்து, முகம் திருப்பி, நோக்குகிறாள்.

அவளுக்கு மூச்சு முட்டுகிறது. தாயை அணைத்திருந்த கைகள் சக்தியை இழக்கின்றன. கால்களின் கீழ் தரை நழுவுகிறது. ●



# YAGNA - SPIRIT — A COSMIC LAW

In order to make the intelligent sceptic in Arjuna accept the philosophy of working in the *Yagna*-spirit, Krishna now shows how it is a universal law of nature. Everywhere around us, from the twinkling stars to the flowing rivers, nature serves the world in the *Yagna*-spirit. The sun shines, but demands no appreciation from anyone. Rains fall, rivers flow; plants flower, trees bear fruit; oceans heave; towering mountains stand all serve the world to make it what it is, and none of them seem to demand even a passing recognition from the people populating it. They all do their duties discovering a joyous fulfilment in the very performance.

In the style of a mythology here Krishna sings. Vyasa was a poet-philosopher and therefore in him poetry, science and philosophy often get mingled to enrich each by the other. This is the style of the Geeta Acharya.

Lord Krishna says, (III-10) *"The Creator (Prajapati) after having created mankind, together with the Yagna, said. "By this shall you create: this shall be the fulfiller of all your desires."* The idea of the *Yagna*-spirit is the universal law of nature and is given out against an awe-inspiring and dignified background. The creator conceived the *Yagna*-spirit along with the creatures, and as a parting gift, to the best of his creatures, the highest evolved, the intelligent man. He presented it. Said the mighty Creator. 'Now I give you the *Yagna*' the power to co-operatively work together for a desirable goal. With this functioning in this co-operative spirit of selfless dedicated endeavour may-you



all prosper. Nay, even if man were to discover any imperfections in nature, or in the scheme of life in the world, an intelligent community can, all by itself, striving in the *Yagna*-spirit of selfless co-operative endeavour, bring about all improvements and every conceivable progress. The story of the scientific world and its growth during the last 1,000 years; the story of the economi cand political revolutions the world goes through from time to time, are all examples. Alas! men co-operate and act a as team more often for destructive wars than for constructive work of creating peace and harmony among them selves; It is due to a weakness inherent in man that he fails in his attempts at co-opeartive endeavours. We know if all decide and work for a cause, good or bad, we can suceed. We can make a heaven of earth, or a hell of life around us. In order to co-operatively work each will have to sacrifice his ego and his personal desire-gratifications If any one in a team asserts his ego or grows anxious for his own desire - gratifications the cadence in work is lost, and the co-operative scheme breaks down. Thus for success the entire team must have one single inspiring ideal at the altar of which everyone must readily surrender their personal vanity and greed. A large number of people, coming together to act in unison at the same altar of Grace, for the total glory of all, is the ritual *Yagna*. This *Yagna*-spirit is a gift received from the Creatror by man as comm-

universe, and so all must have a healthy life of mutual love, consideration and charity. The community is sure to succeed in progress and welfare when it has learned to live and strive as one entity, as a single unit in essence. The more the tensions among members, the more gross becomes each seperate ego and, thereafter each in his selfishness cheats, loots, misappropriates, arrogates that which belongs to all. Soon disparity in wealth is brought about— from then on growth of class and class bickerrings, race and racial problems, national and international pulls and counter-pulls come into play. Peace is broken easily and readily first in the hearts of people, then within the community, immediately followed by national disintegation and international wars.

According to the Hindus, the entire universe is a House and all creatures belong to it In brotherly love, striving together gather the profits and distribute them equally to all not according to needs-it is a blind and ready equity in distribution. Some are 'producers'; the many are 'consumers' in any community, in any period of history. Few create wealth many are there to share, and share they must *equally*. Together produce, together enjoy.

One may wonder if this is just We may ask, 'why should then the few produce? What benefit do they derive for their extra exertions?' Our scriptures answer very reasonably that theirs is the privilege of feeling happy that by the Lord's Grace they have the extra ability to porduce and serve all others who have not this capacity The Industrial Organiser, The Scientific Research Scholar, the Agricultural Producer etc, are previleged - they are the few who have the extra knowledge and ability to serve a larger number of their brethren.

Again, (III-13) '*The good eating the 'remnant of Yagna' are freed from all sins, but those who cook for themselves are sinful ones, eating but sin*'. The verse is a typical example of the veiled language of all scriptures. The mataphor of the *Yagna* ritual is continued. In a religious ritual, 'What is left over' after the worship at the altar *(Prasad)* is called in Vedic literature as *Yagna-shishtam*. This is distributed to all as 'communion'. This is equally distributed to all who are present in the sacred hall during the auspicious function.

Krishna using this term says, 'the good eat the *remnant of Yagna*' meaning, the healthy members of a dynamic society producing and progressing under the irresistible dash of their togetherness, each receives, 'what is left over', from the *Yagna*—'*Yagna*' meaning the co-operative endeavour undertaken with a spirit of selfless dedication, and without any selfish desires.

Such persons who serve the socicty with all their abilities (yagnashishtashinah santah) 'are freed from all sins' (muchyante sarvakilbishaih) They have no more any obligations in life-they are not indebted to society-they are not thieves in the community. When actions-obligatory duties (niyata Karma) - are undertaken without ego and ego - centric desires, the existing Vasanas are exhausted and no new *Vasanas* are created. To live this in society is Hindu Socialism.

Each is to strived hard, sincerely

unity, not as an individual.

The power of changing the world is in the hands of the community though they may draw their inspiration to co-operate and act for its accomplishmen from a single individual 'leader'. And they can exert this power only through selfless dedicated team work......... the 'dynamism of togetherness' can change the world and inaugurate any progress conceived by man.

This 'blessing' pronounced by the Creator need not necessarily work out in life, because we know that we can only strive, but our efforts aften do not bear fruits when the environments and circumstances are not conducive. A farmer may work hard but inclement weather can spoil his harvest. Nature also must co-operate in order to make man's efforts a grand success Will the Cosmic-Forces obey us? Have we any command over them?

To clear this doubt, the Geeta continues, (III-II) "*Cherish the Devas with the Yagna-spirit and those Devas shall in turn cherish you: thus cherishing each-other you shall gain the highest good*" These words are put into the mouth of the Creator- it is His command. When men in a community co-operatively strive, without ego and ego-centric desires, the Cosmic Forces that constitute the environments shall cherish them in turn. In short, when man works in the *Yagna*-spirit, the outer circumstances must miraculously change their pattern to be conducive to the common will of the selfless community striving for the good of all.

When we cherish the outer cosmic-Forces (*Devas*), they shall in return cherish us with the fulfilment of our welfare or whatever is the common demand of the total community striving together. This is a divine Law - a Universal Truth-a scientific Fact. Thus, mutually cherishing each other, let man with the grace of the *Devas*, achieve the greatest prosperity.

## HINDU SOCIALISM-24

Krishna rightly warns here against those who try to misappropriate the profits created by the common endeavour of all, when all have served in a spirit of *Yagna*. He says, (III-12) "*The Devas cherished by the Yagna-spirit will bring to you all your desired-for objects. So he who enjoys objects given by the Devas without offering to them is indeed a thief*."

Nature blesses every truly co-operative endeavour with complete fulfilment and rewarding success when it is selfless and desireless. All such communal profits and successes are really gifts from Nature - blessings of the *Devas*. When any profit accrued thus as a result of the total dedicated efforts of the many dis misappropriated by a man (tairdattan apradayebhyo yo bhunkte). then he is verily a thief (stena eva sah) No single member of a team has the right for even a 'larger' share in the total wealth created out of the team's dedicated co-operative efforts. He who misappropriates, he is a looter, a common thief, degrading, disgusting, despicable. Equal distribution is the Krishna-ideal.

Hindu Socialism stems forth from the recognition of the supreme Divinity that is at once the core of all and transcends the universe of names and forms. It is the Infinite Factor whose multiple expressions that constitute this wide

producing as much as he can for the welfare of all, and himself to receive from the society only his humble share (yagnashishtam) He who thus gives and enjoys upon his share in the community has no more any obligations: he is free to enjoy his share This is Hindu Socialism... based upon the guidance for the evolution of man to God-hood.

'Those who cook for themselves' (ye pachantyatmakaranat), meaning, those who organise and run productive centres for their own personal gains, this, ofcourse, includes all activities springing from selfish motives, activities catoring to the aggrandisement of wealth and power. Such persons who are cooking for themselves (ye pachantyatmakaranat are described here by Krishna as 'sinners eating but sin' (Bhunjante te tvagham papah). In spiritual science people who act in the world with ego and ego-centric desires gather to themselves more and more 'sins'—meaning, negative *Vasanas*, which will rake up future restlessness, mental worries, regrets and anxieties.

Hindu Socialism is thus preached to the Hindu Prince by the Lord in these four simple-looking verses.



# Thathaha Kim?

— K G. Seshadri

Like *Our Vadis* or *Che sara, sara*, I have been fascinated be the Sankrit phrase, *Thathah Kim*, with which interjection my friend and colleague K. V. J. used to lard his philosophic utterances in my room, now and then. Not being a Sanskrit scholar myself, I asked him its signification He said it meant 'What if?

Now, 'If' according to Touchstone the motley Fool in *As You Like It*, is a great word. 'Your *if* is the only peacemaker; much virtue in *if*!' says the wise Fool. Even quarrels upon the Seventh Cause can be settled by the use of an '*if*' as 'if you said so, then I said so!. But the conditional 'if in this context is a negative, an escapist concept. It offers a sure safe line of retreat from a ticklish situation when there is no other way out. It is the coward's way–the way of a weakling who backs out when his bluff is called by a stronger will than his own. But 'Thathaha Kim' (What if?) is entirely different-it is a challenge to circumstance, to fate itself, to anything in fact which is unpleasant or hostile or anti–. WHAT IF? Why, it sounds like Satan's heroic declaration in Hell :

What though the field be lost?
All is not lost; the unconquerable will,
And study of revenge, immortal hate
And courage never to submit or
yield:
And what is else not to be overcome?
(Paradise Lost : Bk I)

A heroic challenge indeed — if we men can make it and stick to it against all odds For one thing, there is little to be done about a bad situation other than taking it coolly. For another, even if you protest and try to do something about it, it requires a certain state of mind — a csrtain indifference to consequences, a certain fearless deviltry — to go against the current; This may sound sheer recklessness but there is sound reasoning behind it; Fear produces fear; Daring on the other hand, drives danger away; The world is for the brave.

None but the brave,
None but the brave,
None but the brave deserves the fair.
(Dryden : Alexander's Feast)

The world has always worshipped the brave and the fearless : for they were ready to give up the ultimate, - life itself, that by giving up which it itself is no more — this indeed is the greatest height to which a man can attain. Hence it is we honour the soldier who lays down his life for his country, the man who saves a drowning child at the risk of his own life, the explorer and the adventurer who stride into the unknown to make it known, the cosmonaut and the astronaut.

There is another aspect to this: what if we fail ? What if we don't get what we deserve ? What if we are not honoured by our fellowmen? God the great potter whose wheel shapes the vessel, – He watches over our every action.

" All I could never be,
All men ignored in me,
This I was worth to God, whose
wheel the pitcher shaped "

cries old Ben Ezra in Browning's

poem. So lon gas we do our duty as our conscience dictates, so long as we just draw the line and saw away, let the chips fall as they please, we must be content. No acknowledgment of services rendered ? What if ? No payment ? What if ? No praise ? What if ? " To be acknowledged, Madam, is overpaid " says Kent to Cordelia when she thanks him for taking care of her old father in hi travails. (' King Lear'. This should be our stance. The reaction from others should not have been expected in the first instance. To do so, were a sign of weakness. This may sound arrogance. But there is a divine loftiness about this kind of indifference to praise or reward, even insouciance, if you want to call it so; Even if we get into trouble because of this haughty attitude, it does not matter. Let troubles come. We will meet them half-way. ' Let what will be, o'er me ! ' sings Stevenson's Vagabond taking life as it comes, hell or high-water ! What if ! The heavens may fall, the earth may crack - it is of no concern to us directly so long as we stick to our own truth.

" This above all; to thine own self be true,
And it must follow, as the night the day,
Thou canst not then be false to any man " (' Hamlet ')

says Polonius to his son Laertes ni his famous advice.

Yet another aspect of this situation stems from a higher level of comprehension : the Stoic principle of *Nil admirari*. " Wonder at nothing ". This is a variant of " Thathaha Kim ? " Mr. X has crossed the Alps on foot. What if ? The Everest has been conquered. What if ? The First Man has landed on the Moon. What if ? A Russian rocket has reached Venus; What if ? Be it anything, tragical, comical historical, pastoral, heroical, marvellous miraculous, wondrous, — What does it matter if an extraordinary thing has been done or made or attempted ? The world wages on, for better or for worse, and not all our triumphs, little, or great, are going to make one tiny bit of difference to its structure or composition. Just look around you and you find the lower forms of life than Man have achieved more miracles than he can ever hope to compass. It is by imitating the bird the ant and the bee and the fish that man was able to build, fly, and sail. A great discovery ? Well, there will be a greater discovery sooner or later. A great battle ? A greater may be fought soon ! A wonderful invention ? A newer, a more wonderful invention may follow soon, making the earlier one look childish

Our great Mentor Triloka Sitaram used to say (and lived what he said), that the macrocosm can be measured by the little finger of a man's hand. He wondered at nothing, nor baulked at anything; in fact, the greater, the higher the challenge or experience, the more at home he became! "Thathaha Kim?" might well have been his heraldic phrase. I know no man who came nearest to a personfication of this sublime Sanskrit motto but Triloka Sitaram. In one of his 'Prose Petals' translated by me, he says:

"Loss in business? What if? Let us start a new business!
Defeat? Well! Let's begin again!".

To all of us who knew him intimately, he gave unstintingly of his great heroism, to bear up to loss, defeat, suffering, to in fact the thousand natural shocks that flesh is heir to. 'Peace hath her victories no less renowned than war' and Trilokam in his own unobtrusive way was a great Hero of Peace.

But I don't want to give the impression that I don't care for human achievement. The supercilious indifference of the in capable man ... that were an insult to human dignity itself. While recognizing the worth of any achievement, one should not lose one's head over it. So too, one should not lose one's heart over a loss or defeat. There is a value for every action in time and space; ... neither more, nor less than what it deserves can be or should be given to it; that is all. This was the attitude that the great T. L. S. taught us in the Devasabha and perhaps it is his spirit that moves my fingers as they write these lines on the fascinating phrase "Thathaha Kim"! *

# மானுடம் எங்கே போகிறது

''மஹி''

'புல்லாகிப் பூண்டாகிப் புழுவாய் மர மாகிப் பல்மிருகமாய்ப் பறவையாய்ப் பாம் பாகி' என்றெல்லாம் பரிணமத்தின் விளிம்பில் மனிதன் வழிந்தான் பூமியிலுள்ள உயிர் வகை களில் மனிதன் ஓர் ஆச்சரியம் ஒரு பூரணம் சிருஷ்டியின் திமிரான பெருமைக்கு ஒரு சான்று

நாலுகால்களால் தவழ்ந்த மிருகம் பின் னங் கால்களால் நின்று முன்கால்களைக் கை களாக்கிக் கொண்டது தான் மனிதன் என்பது டார்வின் கூற்ருக இருந்தாலும், சிரிக்கத் தெரிந்தவன், சிந்திக்கத்தெரிந்தவன், மனிதன் அழமுடிந்தவன், மனிதன்தான். இந்த வல்ல பங்களில் லவ லேசமாவது வளர்ந்த பரிணமத் தின் மேற்படியிலும் மனிதனுக மாறியதன் முன் நிலையிலும் உள்ள குரங்குக்கு உண்டா என்று பார்த்தால் 'டார்பின்தியரி' ஒரு ஒட்டு மொத்தமான கற்பனைதான்.

ஆனாலும் இரண்டு கால்களால் மட்டும் நடப்பதனுல் மனிதன் ஆகிவிட்டவன் சிற்சில சமயங்களில் பழைய வாசனையில் ரத்தவாடை பிடிக்கத் தொடங்கிவிடும் போது, ஏய்த்துப் பிழைக்கும் போது, சூழலில் நட்டாமல் கத்திக் குரைக்கும் போது, புலியை, காக்கையை, நாயை நினைவு படுத்திக் கொள்வது போலத் தான் இருக்கிறது.

எங்கு வேண்டுமானாலும், எப்படிவேண்டு மானாலும் தின்று, இருந்து, கலந்து பெருகிப் புழுத்து நெளியக்கூடிய மிருகத்தை விட்டு நகர்ந்து நகர்ந்து, கல்பகோடி காலமாக உயர் ந்து வந்த மனிதன், அன்பு பண்பு, மொழி நாக ரிகம், கலை, தொழில் என்றெல்லாம் பேசக் கற்றுக் கொண்டிருக்கிறுன்.

பேச்சுமட்டும் போதுமா? அன்பைப்பற்றி அன்பின் சிறப்பைப்பற்றி அன்பு செய்வதைப் பற்றி ஆறுமணி நேரம் பேசும் மனிதன் யாரி டமாவது அன்பாகப் பேசுகிறுனு; என்பதைத் தேடத்தான் வேண்டும்.

பண்பை, பரோபகாரத்தை, பதிபக்தியைப் பற்றி பாட்டம் பாட டமாகப் பேசிவிட்டவன் மேடைவிட்டிறங்கியவுடன் கூட்டத்தில் வந் துள்ள பெண்களைத்தான் பார்க்கிறுன். ஒரு வனுக்கு ஒருத்தி என்பது மனிதனுக்கே உரிய ஒரு ஆரோக்கியமான பண்பை தன் மனைவி என் பதற்கு மாத்திரமே பொருத்தம் பார்க்கச் செய்யும் அதே நேரத்தில் பிறர் எல்லைகளுக்குள் ஆதிக்கம் செலுத்த ஆசை கொண்டு முயலு வதில் குறைவதில்லை சூழல் சந்தர்ப்பம், வசதி இவைகள் சாதகமாக இருந்தால் மனிதன் பெண்ணின் விஷயத்தில் ஒதுங்கிச் சுருங்கிக் கொள்வதே இல்லை சற்று கைவீசியே நடந்து கொள்ளத்தான் செய்கிறுன் என்னும் போது மனிதன் மனிதனுகி விட்டானு என்றே எண் ணத் தோன்றுகின்றது

ஹோட்டலில் வாஷ்பேஸினில் வைத் துள்ள சோப்புகட்டியும் கும்பலில் இருக்கும் பெண்ணும் ஒன்றுதான் என்னும் மனேபாவம் மாறவேயில்லை. சோப்பைத்தடவும் அதே மனப்பக்குவம் இங்கு வந்து விடுகிறது.

பஸ்ஸின் இறங்கும் வழியில் நின்று கொண்டு இறங்குபவருக்கு இடைஞ்சல் செய் யும் காரணமும் மேலே சொன்ன ஒரு சிறிய உராய்வு ஒரு மோதலுக்கான தவமாகத்தான் தோன்றுகிறது

ரெயிலுக்கோ, சினிமாவுக்கோ. ஏன் கோவி லுக்கு அர்ச்சனை டிக்கெட் வாங்குமிடத்திலே கூட 'கியூ' நிற்பவர்களை முட்டாள்களாக்கி விட்டு முதலில் நிற்பவனை அழைத்து கெஞ்சி டிக்கெட் பெறும் பக்குவம் வளர்ந்து கொண் டேதான் இருக்கிறது. தான் வாழவேண்டும் என்ற எண்ணம் நல்லதுதான். ஆகும் தான் மட்டும் வாழவேண்டும் என்ற வேகம் வரும்

போது தான் மனிதனைப் பற்றி சிந்திக்க வேண்டியதிருக்கிறது.

தனக்கு மட்டும் என்னும் சுயநலம் தான் பணம் சேர்க்க வைக்கிறது. தான்மட்டும் என்ற நிலையில் தனித்து நிற்கப் படாதபாடு படுகிருன். போகாத வழிகளில் குத்தும் முட்களைக் கூட பொருட்படுத்தாமல் போகிருன். தனக்கு மட்டும் என்ற சிறப்புப்பெற பணம் செலவு செய்ய வேண்டும். அதற்காகப் பணம் சம்பாதிக்க வேண்டும் சம்பாதிப்பதைப் பெருக்கப் பணம் செலவு செய்ய வேண்டும் என்ற சுழல் சக்கரம் தனக்கு மட்டும் என்ற சிறப்புக்காக விலைகொடுக்கத் துவங்கியதற்குத்தான் லஞ்சம் என்று பெயர் கிடைத்தது. பலர் பலகாலமாகக் காத்துத் தவம் கிடக்கும் ஒரு செயலைச் சில மணி நேரங்களில் முடித்து விடுகிறது பணம் அதாவது லஞ்சம்.

லஞ்சம் தருகிருன். அதை ஏன் வாங்குகிருன்...? அவனுக்கும் ஒரு உந்துதல். தானும் அடுத்த வீட்டு டெலிவிஷன் அந்தேடு வைப் பார்த்து எதிர்த்த வீட்டு வாலிபனின் டபிள் நிட் யானைக்கால் பெல்ஸை, டெர்ரியைப் பார்த்து... நைலான் நைலக்ஸ் இத்தியாதி பகட்டுகளில் பெய்ம்மறந்து அந்தப் பகட்டுள் தானும் புகுந்து கொள்ள ஆசை கொள்ளுகிருன் அந்தப் பகட்டுள் நுழையப் பணம் வேண்டும். பணம் லஞ்சம் ரூபத்தில் வருகிறது வராதபோது கேட்கிருன். இது கொடுத்தால் இது கிடைக்கும் என்பதாக விலைப்பட்டியல் போடுகிருன். எந்த ஒரு பொருளுக்கும் எந்த ஒரு பணிக்கும் விலை உண்டல்லாவ? ஆகத் தனக்கு மட்டும், தான் மாத்திரம் என்ற தனித்துவத்துக்காக பணம் அளக்கிறது நாகரிகத்தை அளக்கவும் பணம் தான் மீட்டர் கோலாக நின்று இனம் சுட்டுகிறது.

இப்படிப் பணம் ஈட்டிய பின்னர்தான் அதைக் காப்பாற்ற வேண்டியபயம் தோன்றுகிறது கும்பலின் இடையில் இடதுகை இரு விரல்களால் அடுத்தவன் பாக்கெட்டில் கூசாமல் துழாவும் தொழில் மேதைகள் உலவும் நகரத்தின் நாகரிகத்தில் பணத்தைக் காப்பது ஒரு பெரிய சாதனை. அதற்கு உள்ள கவலை அப்பப்பா! பணத்தைப் பதுக்கப் பல வழிகள். பணத்தில் நிறபேதம். கறுப்பு. வெள்ளை.

பணம் பதுக்கும் பரபரப்பில் கடவுளும் நினைவுக்கு வருகிறார். அதிலும் தான்மட்டும், என்ற பாவம் தலைதூக்குகிறது; 'மஹாதர்மவான்' என்று பட்டம் கட்டிக் கொள்ளவும்; திருப்பணி நிபுணர், சேவா சீலர் என்று தனித்திருக்க கறுப்பு பணம் பயன்படுத்தப்பட்டு, கோவிலில் புழைமை மூடப்பட்டு புதுமை 'ராஜாங்க'மாகிப் பளபளக்கிறது; அதிலும் விளம்பரம். கோவிலில் படம் மாட்டுவது ஒரு திருப்பணி. அதன் அடியில் பெயர் பொறிப்பது ஏன்? படம் வரைந்தவர் பெயர் வரைவது ஏன்? தான் மட்டும் என்ற சிறப்பு விடுதிக்கான உந்தல், உத்வேகம்.

திருப்பணி என்னும் பெயரால் பழைய சிற்பச்சிறப்புக்களைச்சிமிண்ட் போட்டு கெட்டிப்படுத்தி மறைத்து கோபுரக் கல்லில் திருப்பணிக் கமிட்டியின் பட்டியல் அஸ்திவாரம் வரையிலும் வரையப்படுகிறது. கோபுரம் கட்டிய சோழ, சேரர்கள்கூட தம் பெயரை விளம்பரப் படுத்தவில்லை.

இத்தனை கோலாகலத்திலும் பகுத்தறிவுச் சிந்தனைகள் பரவலாக்கபபடுகிறது! கடவுள் இல்லை! என்பதையும் கல்லில் பொறித்து வைக்கிறார்கள்; இவைகள் மனிதர் சிலைகளுடன் போட்டி போடும் அளவுக்கு ஊர்தோறும் பட்டி தொட்டிகளிலும் காணப்படுகிறது. ஆப்டிமிஸமா ஃபெஸிமிஸமா என்று பட்டி மண்டபம் நடக்கிறது; தெரியாத ஒன்றைப் பகுத்துப் பார்க்கப் பறக்கிறான். வான்மதியில் கால் வைத்து விட்டோம்; காற்றைவிட வேக மாக வானில் பறக்கிறோம்; ஆழ் கடலுள் வாழ்கிறோம்; அந்தரத்தில் ஸெட் லைட்டுகளை பறக்கவிடுகிறோம் என்று பகுத்தறிவுச் சிந்தனை மானுடத்தின் வல்லபத்தைத் திமிராகப் பறை சாற்றுகிறது;

இப்படிப் பறை சாற்றும் அதே சமயம் பாட்னாவில் வெள்ளம். ஜப்பானில் பூகம்பம்; கீழக் கடற்கரையில் புயல்; பகுத்தறிவும், விஞ்ஞானமும் இந்த நிகழ்ச்சிகளில் இருக்கும் இடம் தெரியாமல் பதுங்கி விடுகிறது. மதியில் கால் வைத்த மானுடத்தின் வல்லமை புயலில் சிதறிவிடுகிறது; பூகம்பத்தில் இடிந்துவிடுகிறது; மின்னல் தாக்கி பள்ளிச் சிறுமி சாவு; பகுத் தறிவு தடுக்கவில்லை; புயலில் ஒரு தீவே மூழ் கியது; விஞ்ஞானம் தடுக்கவில்லை. ஆனாலும் மானுடம் மார் தட்டிக் கொள்கிறது நான் தான் சந்திரனை மிதித்தேன்; சூரியனை ஏவல் கொண்டேன் என்று.

ஏன்? இராவணன்கூட சந்திர சூரியர்களை ஏவல் கொண்டான்; இலங்கையில் வெயில் கொளுத்தவில்லை என்று புராணம் சொல்பவர் சொல்கிறார்கள். அப்படியென்றால் மானுடம் ராவணனின் வழியில்தானா போய்க் கொண்டி ருக்கிறது; பத்து தலைகளின் வல்லமை வளர்ந்து விட்டதா? இதை அடக்க ஒரு பத்தரதன் புத்திரன் தோன்ற வேண்டுமா என்று நான் சிந்திக்க வேண்டியதிருக்கிறது.

மாந்தர் உழாவிடினும், நீர் பாய்ச்சா விடினும் வான் பொழிந்து பயிர் விளைந்து மானுடம் வாழாதா? ஏன் சண்டை போட வேண்டும்? என்ற பாரதியின் தாபம் தலை தூக்கத் தான் செய்கிறது. வெந்ததைத் தின்று விதி வந்தால் சாடும் விந்தை மனிதர் கள் நாளை வரும் நிகழ்வை, மரணத்தை முன் கூட்டியே அறிந்து கொள்ள முடியாத அற்ப ஜீவன்கள். ஒரு காற்றடிக் கயிற்றுக்கு இறை யாகும் புல்லிய உயிர் எத்தனை உயரமாக நினைக்கிறது; எத்தனை திமிராக வாழ்கிறது? இதன் பயணப் பாதை சரியானதா? இதற்கு வழி காட்டத் தோன்றிய மகான்கள் போதாவா! இதை வழிபடுத்தி நடத்திச் செல்ல இன்னும் எத்தனை காந்திகள் வேண்டும். எத்தனை புத்தர்கள் தோன்ற வேண்டும்? இன்னும் எத்தனை சங்கரர்கள் அவதரிக்க வேண்டும்?



# அன்ரெரு நாள்

1951 ஆம் ஆண்டு; மார்ச் திங்கள் : 20 ஆம் நாள் செவ்வாய்க்கிழமை, மதுரைக்கு வந்திருந்த ஸ்ரீ ஹரீந்திரநாத் சட்டோபாத்யாய அவர்களைக் கண்டு சிறிது நேரம் அளவளாவும் பேறு எனக்குக் கிட்டியது. மறக்க வியலா நிகழ்வது ! மதுரைக் கலாச்சாரக் கழகத்திலே தமது சொற்பொழிவினை முடித்துக் கொண்டு, மங்கம்மாள் சத்திரத்திலே, தாம் தங்கியிருந்த அறையிலே அமர்த்து ஓய்வு கண்டிருந்த போது நான் சென்று அவரைக் கண்டேன். கவிஞரின் கனவுக் கண்கள் வரவேற்புரைத்தன. உரை யாடல் தொடங்கியது அப்போதுதான் அவர் ருஷ்யா நாட்டில் பயணம் செய்துவிட்டுத் திரும்பியிருந்த சமயம் தமது கருத்தினை யொட்டி நாடகங்கள் நிகழ்த்திக் காட்டவோ, நாடக அரங்கிலே புதிய உத்திகளைப் புகுத்திக் காட்டவோ மத்திய அரசு ஆதரவு நல்கவில்லை என்பதைத் தெளிவாகவே குறிப்பிட்டார். அவர் குரலிலே ஏக்கமும் சோகமும் கலந்து தொனித்தன. பல பொருள்களைப் பற்றிப் பேச்சுப் படர்ந்தது இடையிடையே வினுக்கள் விடுத்தேன் யானும் விடைகளும் உற்சாகமாக வந்தன சொல்லாடலிடையே,

The third class fare is very very fair ;
For ministers all fly in the air,

என நகைச்சுவை ததும்பக் குறிப்பிட்டார் அவர். பின்னர்த் தமது ஹார்மோனியத்தை எடுத்து வைத்துக் கொண்டு இழைத்தார் : தோடி ராகத்தைச் சிறிது நேரம் ஆலாபனை செய்து காட்டினர் சுருதியோடு இசைந்து விட்ட இனிய கம்பீரமான சாரீரம் ஹிந்தி மொழிப் பாடலொன்றும் பாடினர். எவ்வளவு சுகம்! அடுத்துத் தமது தமக்கையார் சரோஜினி தேவியார் ஆங்கிலத்தில் யாத்துள்ள 'சிவிகை பொறுப்போர்' (The Palanquin Bearers) என்னும் செய்யுளை, அறையின் குறுக்கே நடந்த படியே, கைவிரல்களைச் சொடுக்கிக் கொண்டே சொல்லிக்காட்டினர்

O lightly, O lightly, we bear her along
She sways like a flower in the wind
of our song

எனத் தொடங்கி, இரண்டிரண்டு வரிகள் சொல்லி முடிந்ததும், 'ஓ ஹோம், ஓ ஹோம்' என முழக்கமிட்டார் சிவிகை யொன்று சுமந்து செல்லப்பெறும் காட்சியே கண்முன் நின்றது. இன்றளவும் நெஞ்சம் மறக்கவில்லை. கவிஞர் தம் கைக் கடியாரந்தனைக் கடைக்கணிப்பது கண்டேன். முப்பது நிமிடங்களே ஆகியிருந்தன! நிலைமையைப் புரிந்த வண்ணம் எழுந்து நின் றேன் விடை பெற. கையெழுத்துப் பெறும் பொருட்டு எனது சிறு நோட்டுப் புத்தகத்தை அவரிடம் கொடுத்தேன். இவ்வாறு எழுதிக் தந்தார் :

Where artists are neglected
And mere politicians boomed
That country's destiny is done,
That nation's fate is doomed

Harindranath Chattopadhyaya
20th March 1951.

யானும் எனது அன்புக் காணிக்கையாக The gospel of Perfect Life (கவியோகி சுத்தா னந்த பாரதியார் அருளிய 'யோகசித்தி'ப் பாடல்களின் ஆங்கிலப் பெயர்ப்பும் விளக்க வுரையும் கொண்ட நூல்) கொடுத்து விடை பெற்று வந்தேன் ஹரீந்திரநாதர் பெருங் கவிஞர், இசை வல்லுநர், புலவர், பேச்சாளர்- அனைத்தும் சேர்ந்த அற்புதக் கலைஞர் !

நேசம் மறக்கவில்லை நெஞ்சம். நல்ல வாய்ப்பு நேரச் செய்த அன்ெரு நாளை மறத்தல் இயலுமா ?

வி. ஜி. சீனிவாசன்

# தண்ட காரண்யத்தில் பத்தாண்டுகள்

— M. S மகேந்திரன் —

கம்பனின் அமர காவியத்தை சுவைத்து இன்புற மனிதனின் ஒரு ஆயுட்காலம் முழுவது மே தேவைப்படுகிறது. காவிய அமைப்பிலும் கவிதை நயத்திலும், கதை மாந்தர்களின் மாண்புமிகு குண நலத்திலும் ஈடுபட்டு கவிச் சக்கரவர்த்தியின் பன்னீராயிரம் பாடல்களையும் துருவித்துருவி ஆய்ந்து மனதைப் பறிகொடுத்த அறிஞர்கள் பலர். அவர்கள், ஆரண்யத்தின் ஆழ்ந்த அமைதியையும் குளிர்தரு நிழலையும், பறவைகளின் மதுரகானத்தையும், இனிமை நிறைந்த இயற்கைக் காட்சிகளையும் இராமன், இலக்குவன், சீதை ஆகியோருடன் தாமும் கலந்துகொண்டு உலாவி மகிழ்ந்தவர்கள். வன வாசம் பதினன்கு ஆண்டுகள் அவர்கள் தண்டக வனத்திலே வாழ்ந்திருந்த பத்தாண்டுக் கால விபரம் கம்ப இராமாயணத்திலே மிகச் சுருக்க மாகவே கூறப்பட்டுள்ளது. '' சந்தோஷமாக வும் சுகமாகவும் கழியும் காலம் இலக்கியத்தில் சுருக்கமாகத்தான் முடியும். அது பற்றிக் குறைபடலாகாது'' என்று ராஜாஜி அவர்கள் கருத்துத் தெரிவித்துள்ளார். அமுத காவியத் தில் ஏற்பட்டுள்ள பத்தாண்டு இடைவெளிக் காலத்தை ஊடுருவிப் பார்க்க வேண்டுமென்பது எனது பேராவல். வற்ருத பாற்கடல் என்று வர்ணிக்கப்படும் கம்பராமாயணப் பாடல்கள் இருக்க அவற்றை அறிஞர்கள் சுவைத்து இன்புற்று உருகித் தவித்துக் கொண்டிருக்க அவற்றையெல்லாம் விட்டுவிட்டு இல்லாத பகுதியை எண்ணி ஏங்கிக் கொண்டிருக்கும் என் மனே நிலை வியப்புக்குரியதே. காவிய மாந்தர் களுடன் நாமும் கலந்துகொண்டு அந்த அடர்ந்த ஆரண்யத்திலே சுற்றுலா செய்து மகிழலாமே என்ற ஒரு ரஸானுபவம்தான் என் மனநிலைக்குக் காரணமாயிருக்கலாம் என்று கருதுகிறேன்.

புத்தர் தன் இளம் மனைவியையும் அன்புக் குழந்தையையும் பிரிந்து அரண்மனையைவிட்டுப் புறப்பட்டார் என்பது தெரியும். பின்னர் கயா வில் போதி மரத்தடியில் அவருக்கு ஞானேதயம் ஏற்பட்டது தெரியும் இதற்கிடைப்பட்ட ஆறு ஆண்டு காலத்திலே என்ன நடந்தது என்ற விபரம் தெரியவில்லை. அந்த இடைவெளிக் காலத்திலே என்ன நடந்திருக்கவேண்டும் என் பதைக் கற்பனை செய்து 'கேட்டதெல்லாம் போதும்' என்ற அற்புதமான நூலொன்றை திரு ர சு நல்லபெருமாள் அவர்கள் எழுதி யுள்ளார்கள். அதுபோல கம்ப இராமாயணத் திலே ஏற்பட்டுள்ள பத்தாண்டு கால இடை வெளியில் நடந்த நிகழ்ச்சிகளைக் கற்பனைசெய்து நூல் ஒன்று எழுதப்பட்டால் எவ்வளவு மனே ரம்யமாயிருக்கும் என்பதை நினைத்துப் பார்க் கிறேன். கம்ப இராமாயணச் சூழ்நிலை மாரு மல், பாத்திரப் படைப்புகள் சிதையாமல் கம்ப னின் காவிய வரம்புக்குள் அந்தக் கற்பனை இருக்கவேண்டும். இந்தக் காரியத்தை திரு. ர. சு நல்லபெருமாள் போன்றவர்கள் செய்ய வேண்டுமென்பது என் பணிவான கோரிக்கை. ஆசை வெட்கமறியாது என்பார்கள். அது போல என் மனதிற்பட்ட வேட்கையொன்றை வெளிப்படையாகச் சொல்லி இருக்கிறேன். பயனற்ற நாவல்கள் பல வெளிவந்து கொண் டிருக்கிற இந்நாளில் கற்பனை நயமிக்க-உன்னத உணர்வுகளின் விருந்தாக - இதுபோன்றதொரு நூல் வெளிவந்தால் நிச்சயம் நலம் பயக்கவே செய்யும் என்பது என் நம்பிக்கை.

ஆரண்யத்தின் இயற்கை சூழ்நிலை பற்றிய அற்புதமான காட்சிகள் சிலவற்றை மகரிஷி வ. வெ சு ஐயர் அவர்கள் '' Kamba Ramayana A Study '' என்னும் தனது நூலில் நமக்குக் காட்டியிருக்கிருர்கள். அக்காட்சி களைக் காண நாம் அவருடன் கைகோர்த்துக் கொண்டு அந்த இடத்திற்கே சென்ருக வேண்டும்.

'' For thirteen years Rama, Lakshmana Sita lived a life of pastoral peace in the forests

True to his mother's word, Lakshmana did everything to make the life of Rama and Sita as happy as possible. When Rama decided to stay at any place for some Considerable time, Lakshmana would make a clearing in the forest, erect a thatched hermitage on a lonely eminence not far from a babbling brook, and plant flowers and creepers around the cottage. He would go into the forest, collect fruits and edible roots for their food, and generally do everything that could conduce to the comfort or add to the happiness of his brother and sister. The deep silence of the forest, the vast panorama of nature around them, the green hillock, the grassy heath, the giant trees upreaching to the vaults of heaven, the wild creepers hanging luxurious from the tops of the tall trees and reaching to the ground, the cool shade, the scraps of blue sky here and there visible through the dense foliage in the interior of forest and on that account the more lovely and the more eagerly looked for, all these contributed to their life of Arcadian beauty and sweet simplicity. In the mornings, after the daily baths and customary devotians, the brothers would go out into the jungle and return to the cottage laden with the banana and the bread-fruit and the sweet mango and edible roots, and would lay them before Sita In the meanwhile Sita would have prepared the welcome meal. After serving them their meal she would partake of the food and then join them in the out-house. As evening drew near, they would go out of the hermitage and enjoy the subtime beauties of the tropical forest. They would listen now to the murmuring of the brook, now to the distant sound of a waterfall, now again to the far off roar of the lion, now to the mellow calls of the sweet-throated ' koil ' or the tender cooings of the woodland dove. Now they would play with the sportive fawn. And now again they would watch the frolicking monkeys jumping and leaping up the trees. Thus they would enjoy the thousand and one sweet things that Nature shows to those that seek her in her solitudes. Rama would tell Sita stories from the Vedas and ancient Puranas of pastoral loves and city magnificence, of religious Calm or daring heroic war, and would raise alternate emotions of love and pity, wonder and admiration is her responsive heart. Sometimes her rich voice at Rama's request would fill the forest solitudes with the very soul music, and then even the ' koil ' would hush her tones and acknowledge a master. Thus passed the life of that pair, happy in the unmeasured fulness of each other's love. But the race of the Rakshasas had to be destroyed and the peaceful course of this perfect love was to be interrupted '.

இதுபோலவே மகான் அரவிந்தர் காட்டிய இரண்டொரு காட்சிகளையும் ஒரு கட்டுரையின் மூலம் படித்த நினைவு இருக்கிறது. கிருபானந்த வாரியார் அவர்களின் சொற்பொழிவுகளைத் தொகுத்து " கம்ப இராமாயண விரிவுரை " என்ற ஒரு நூல் வெளியாகியுள்ளது. அதில் இதுபோன்ற நுட்பமான பல செய்திகளை யெல்லாம் தெரிவித்திருக்கிறார்கள். ஜஸ்டிஸ் உயர்திரு. எஸ். மகராஜன் அவர்களும்

''Kamban'' என்னும் தனது இனிய நூலில் இதுபோன்ற சில காட்சிகளையெல்லாம் கோடிட்டுக் காண்பித்துள்ளார்கள்.

தவிர, தீபம் (செப்டம்பர் 1974) இதழில் ''பிரக்ஞை விளிம்பில்'' என்ற தலைப்பில் சிறு கதையொன்று பிரசுரமானது கதைப் போக்கிற்கிடையில் இராமகாதையின் நல்ல காட்சியொன்றை சிறுகதை ஆசிரியர் திரு. ம ந. ராமசாமி சித்தரித்துள்ளார். அக்காட்சியை நாமும் காண்போமே.

''காடு

காட்டின் இடையே மூவர் நடக்கின்றனர்

விஸ்வாமித்திர முனிவர், ராமன், லட்சுமணன் தாம் அம் மூவரும்.

அவர்கள் அவசரமாகச் சென்ருக வேண்டும். மிதிலையில் சீதையின் சுயம்வரம் நடக்க இருக்கிறது

நடக்கையில் காலடிகளில் சருகுகளும், சிறு சுள்ளிகளும் மிதிபட்டு முறியும் ஓசைகளைத் தவிர வேறு ஓசை இல்லை. ராமனின் காலடிகளின் கீழ் காய்ந்த செடிகளும், புற்களும் தழைக்கின்றன.

காட்டு மரங்கள் மறைந்து, வெறும் வெளிக்கு அவர்கள் மூவரும் வருகின்றனர். முனிவர் நிற்கிருர்.

''ஆகா, என்ன ரம்யமான காட்சி!'' என்கிருர் அவர்.

நீலவானம். அதில் பரிசலாக மிதக்கும் முழு நிலவு. தரை எங்கும் பசும் புல்வெளி, பச்சைப் போர்வையை கண்களுக்கு எட்டும் மட்டும் விரித்தாற் போல

அவர்கள் நடக்கிருர்கள். நிலவின் ஒளி ஆங்காங்கே உள்ள ஒரிரு மரங்களின் கிளைகளூடே புகுந்து, தரையில் நிழல் இடையே நட்சத்திரங்களைக் கொட்டுகிறது அதனால்தான் வானில் நட்சத்திரங்களே இல்லையோ?

புல்வெளியில் ஓர் சிற்றருவி. கலகலவென ஓசையிட்டபடி, கற்கண்டு நீருடன் ஓடுகிறது.

அருவிக்கரையில் நிற்கின்றனர். முனிவர் சுற்றும் முற்றும் பார்த்து அதிசயித்து நிற்கிருர்

''ராமா!''

''ஐயனே!'' ராமன் முனிவர் எதிரில் வந்து நிற்கிருன்.

''இப்பொழுது ஏதோ நிகழ இருக்கிறது. இது ஒரு அசாதாரணமான வேளை. மிக ரம்யமான நேரம். ராமா, உன் பெயரிலேயே ரம்யம் உள்ளது. நீ வருகிருய் என்றுதானே, என்னவோ, இந்த வேளை இங்கு காத்து இருக்கிறது. நான் அனுபவிக்கும் உணர்ச்சிகளை உன்னிடம் சொல்ல முடியாமல் தவிக்கிறேன் ராமா, என்னை உன்னால் புரிந்துகொள்ள முடிகிறதா?''

''சொல்லுங்கள்; ஐயனே!''

''இந்த வேளை இத்தனை எழில் மிகுந்து இருப்பினும், இது ஏனோ பூரணத்துவம், முழுமை பெருமல் இருக்கிறது என்று இந்த உணர்வை நீயும் உணர்கிருயா, ராமா!''

''தங்களது உணர்ச்சிகளை என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. ஐயனே! ஆனல் எனக்கு என்று எவ்வித உணர்வும் இல்லை. அதனல்

இந்த வேளையின் முழுமையையும், முழுமை இன்மையையும் என்னால் அனுபவிக்க முடிய வில்லை''

''அப்படியா? ராமா, நீ மனிதன் இல்லை!''

அவர்கள் நடக்கிறார்கள். அருவியைத் தாண்டுகிறார்கள்.

அங்கே ஒரு கல்.

காலம் காலமாக அந்தக் கல் அங்கே இருக் கிறது

இந்த வேளைக்காகக் காத்திருக்கும் கருங் கல் அது.

நெடிய முனிவர் கல்லைத் தாண்டிச் செல் கிறார்.

பின்னே நடந்த ராமன் கல்மீது வலது காலை வைக்கிறான்.

கல் அசைகிறது.

முன்வைத்த காலை ராமன் பின்னுக்கு இழுக்கிறான்.

கல்லினுள் நடுக்கம், பூகம்பம், பிரளயம்!

உயர்கிறது கல். உருக்கொள்கிறது, பெண் ஒருத்தி வடிவமாக எழுந்து நிற்கிறாள்.

அகலிகை!

''ராமா, இந்த வேளை பூரணத்துவம் பெற்று விட்டது நான் முனிவன். எனக்குச் சொல்லித் தெரியவில்லை. இந்த ரம்யமான வேளை முழுமை இல்லாமல் இருக்கிறதே என்று நினைத்தேன். இதோ இந்தப் பெண் இந்த வேளைக்குப் பூரணத்துவம் அளித்துவிட்டாள். இந்த வேளை இவளுக்காகவே காத்து இருந்தது. உன் காலடிபட்டு கல் இவளாக ஆனதும், இந்த வேளையின் அர்த்தம் புரிந்துவிட்டது. ராமா, நீ மனிதன் இல்லை!''

இராமகாதையின் ஆரண்ய காண்டத்திலே விடுபட்டுப் போன பத்தாண்டு காலத்தில் நிகழ்ந்த கதையை ஊடுருவிப் பார்த்து திவ்ய திருஷ்டியுடன் கற்பனை செய்து மேற்கூறிய காட்சிகளின் சூழ்நிலையில் அற்புதமானதோர் நூலைப்படைக்க அறிஞர்கள் முன்வரவேண்டு மென்பது என் பணிவான வேண்டுகோள்.

இந்த சமயத்தில் என் குருநாதர் அமரர் திருலோக சீதாராம் அவர்கள் தெரிவித்த கருத்தொன்று நினைவுக்கு வருகிறது. ' ரஸிகர் களின் வேட்கையே படைப்புக்குத் தூண்டு கோல்.''



# முருகன் துதி பாடிய இருவர்

பல நூற்றுண்டுகளுக்கு ஒருமுறை இயற்கையின் சக்திகள் வெள்ளமெனப் பெருகி மகத்தான வேகத்துடன் இயங்குகின்றன. அப்பொழுது மகாபுருஷர்களும், மகாகவிகளும், வாக்கேயகாரர்களும் உலகில் அவதரித்து, சமயம், இலக்கியம், சங்கீதம் முதலிய துறைகளில் புரட்சிகரமான மாறுதல்களைத் தோற்றுவிக்கின்றனர். அவர்கள் தோன்றுவதற்கு முன்பிருந்த பண்பாட்டின் சின்னங்களாகவும், தீர்க்கதரிசிகளாகவும் அவர்கள் விளங்குகிறுர்கள். அவர்களுடைய காலத்திலிருந்து கலையுலகில் ஒரு புதிய சகாப்தமே பிறக்கிறது பற்பல கலைகளும் மறுமலர்ச்சிப் பெற்றுப் புதிய சிகரங்களை எட்டுகின்றன அவர்களின் வாழ்நாள் உலகிற்கு ஒளி நிறைந்த நற்காலமாக அமைகிறது. மாந்தர் புதிய உணர்வையும் புதிய பார்வையையும் பெறுகின்றனர்.

இத்தகைய உணர்ச்சிகளுடன் நாம் இந்த 1975ம் ஆண்டில் முருகன் துதி பாடிய இருவரை நினைத்து அவர்களுடைய விழாக்களை நாடெங்கும் கொண்டாடுகிறேம் இவர்களுள் முதல்வரான அருணகிரிநாதர் கி. பி. 1375ல் தோன்றியவர். ஆகவே அவரது 600வது பிறந்த தின விழா இவ்வாண்டு முழுதுமே கொண்டாடப் பெறுகிறது கி பி. 1775ல் தோன்றிய முத்துஸ்வாமி தீக்ஷிதரின் 200வது பிறந்த தின விழாவும் இவ்வருடம் அமைந்தது ஒரு சிறப்பான நிகழ்ச்சியாகும். ஏனெனில் இவ்விருவரும் முருகப் பெருமானின் அருளால் கவிகளாகவும், பாடல் ஆசிரியர்களாகவும், இசைப் புலவர்களாகவும் திகழ்ந்தவர்கள். இருவரும் சம்ஸ்கிருதம், தமிழ் ஆகிய பல மொழிகளில் விற்பன்னர்கள். நூற்றுக்கணக்கான தென்னுட்டுக் கோயில்களில் எழுந்தருளியிருக்கும் மூர்த்திகளைத் துதித்து இசைப் பாடல்கள் இயற்றி, சங்கீதத்தையும் பக்திப் பயிரையும் உரம் போட்டு வளர்த்த பெரியார்.

## அருணகிரிநாதர் :

ஸார்வபௌம டிண்டிம கவி, சந்தப்பாவலப் பெருமான், அஷ்டபாஷா பரமேசுவரர், ஷட்தர்சன ஷண்முகர் என்ற விருதுகளை உடைய அருணகிரிநாதர் சித்திரக் கவி இயற்றுவதில் தமிழ் நாட்டில் ஒரு புது யுகத்தைத் தோற்றுவித்தவர். இவருடைய கவித் திறத்தையும் இசைப் புலமையையும் கண்டு பிரமித்த புலவர்கள் இவருக்கு நாற்கவிராஜர், முத்தமிழரசு, நவரச நாவலர், சந்தக்கவித்தலைவர், இசை ஞானியார், தாளச்செல்வர் என்ற பெயர்கள் கொண்டு அழைத்தும் இவரது மேதா விலாசத்தின் எல்லையைக் கண்டிலர்.

இவருடைய வாழ்க்கையைப் பற்றி கர்ணபரம்பரையான வரலாறு ஒன்றும் ஆராய்ச்சியாளர்கள் அளித்துள்ள வரலாறு ஒன்றும் வழங்கி வருகின்றன. இவை ஒன்றுக்கொன்று முற்றிலும் முரண்பட்டவையாக இருக்கின்றன. பரம்பரையான வரலாற்றின்படி இவர் இளமையில் சிறந்த பண்டிதராகவும் ஆசு கவியாகவும் விளங்கி ஏராளமான பொருளை சம்பாதித்தார். ஆயினும் விதி வசத்தால் பரத்தையர் வசப்பட்டுப் பொருளையெல்லாம் இழந்து, பல பிணிகளுக்கு ஆளாகி வருந்தினுர். உயிரை விடுவதே உத்தமம் என்று துணிந்து அவர் திருவண்ணுமலை ஆலய கோபுரத்தின் மீதேறிக் குதிக்கவும், முருகன் அவரைத் தடுத்தாட் கொண்டு, தரிசனமளித்து, முதல் திருப்புகழின் அடியை எடுத்துத் தந்து அவரை சிவஞானச் செல்வராகவும், திருப்புகழாசிரியராகவும் விளங்கச் செய்தார் பின்னர் அருணகிரிநாதர் பிரவுட தேவராயன்

டி எஸ் பார்த்தசாரதி

என்ற மன்னரால் ஆதரிக்கப்பட்டது, சம்பந்த ஆண்டான் என்ற தேவி உபாசகனை வென்றது. 16000 திருப்புகழ் பாடியது, இறுதியில் கிளி யுருவை மேற்கொண்டு தணிகை முருகப் பெருமானின் தோளின் மீது அமர்ந்தது முதலிய வரலாறுகள் திருப்புகழ் படிக்கும் தமிழ் அன்பர்கள் பலரும் அறிந்தவையே.

திருப்புகழ்கள் பலவற்றில் மாதரின் வனப் பைப் பற்றிய வருணனைகளும், பரத்தையர் மீது மோகங்கொள்பவர் அடையும் இன்னல்களும் விரிவாகக் காணப்படுவதிலிருந்து அருணகிரி நாதரே தமது இளமையில் அவ்வித அனுபவங் களுக்கு ஆளாகியிருக்க வேண்டும் என்ற ஊகத் தின் மீது இவ்வாறு உருவாகியிருக்க வேண்டும். தமிழ் இலக்கிய மரபில் ஆழ்வார்களும் நாயன் மார்களும் பல வகைப்பட்ட பாவங்களைத் தாங்கள் புரிந்ததாகக் கூறி இறைவன் திரு வருளை வேண்டுவது சாதாரண வழக்காகும் கருவிலேயே பரம ஞானிகளாகத் திகழ்ந்த அருணகிரிநாதர் போன்ற மகான்களின் சரித் திரங்கள் இவ்வாறு சித்தரிக்கப்படுவது நமது நாட்டின் துரதிர்ஷ்டம் என்றே கூற வேண்டும்.

**ஆராய்ச்சி வரலாறு :**

ஆயினும் நமது அதிர்ஷ்டவசமாக ஆராய்ச் சியாளர் சிலர் கல் வெட்டுக்களையும், சாசனங் களையும், ஏட்டுச் சுவடிகளையும் ஆராய்ந்து அருணகிரிநாதரின் உண்மையான சரித்திரத்தை பற்றிய ருசிகரமான தகவல்களை அளித்திருக் கின்றனர்.

புதைபொருள் ஆராய்ச்சி இலாகாவைச் சேர்ந்த காலஞ்சென்ற டி. ஏ. கோபிநாதராவ் அவர்கள் வட ஆற்காடு மாவட்டத்தைச் சேர்ந்த முள்ளந் திரம் அல்லது பிரவுடதேவராயபுரம் என்ற கிராமத்தில் கிடைத்த இரு கல்வெட்டுக்களை யும், சில வடமொழி நூல்களின் சுவடிகளையும் ஆராய்ந்து அருணகிரிநாதரின் வம்சாவளியை நிரூபித்துள்ளார். 'விபாக பத்ர மாலா' என்ற வடமொழி நூலிலிருந்து, அருணகிரிநாதரின் முன்னோர்கள் வங்க தேசத்திலிருந்து பதினேரும் நூற்றாண்டில் தமிழ்நாட்டில் திருவண்ணாமலைக் கடுத்த மெத்தைப்பாடி என்ற ஊரில் குடியேறி யதாக அறிகிறோம். காசி யாத்திரை சென்ற அக்காலத்துச் சோழ மன்னன் கங்கைக்கரையில் வசித்து வந்தவர்களும், வேதம் ஓதுவதில் வல்லவர்களுமான எட்டு அந்தணக் குடும்பங் களைத் தமிழ்நாட்டுக்கு அழைத்துவந்து மேற் சொன்ன கிராமத்தில் குடியேறச் செய்ததாக நூல் கூறுகிறது. இவர்களுள் ஒருவருக்கு சோமநாதன் என்ற பெயர் அமைந்திருந்தது. இவரை அருணகிரிநாதர் தமது திருப்புகழ் ஒன்றில்

''அமணர் குல காலனுகு மரிய தவ
ராசராசன்
அவனி புகழ் சோமநாதன் மடமேவும்''

என்று குறித்துள்ளார்.

கோபிநாத ராவ் அவர்களது ஆராய்ச்சி யைத் தொடர்ந்து, தமிழ் இலக்கிய ஆராய்ச்சி யில் ஒப்புயர்வற்று விளங்கிய மகா வித்துவான் இராகவ அய்யங்கார் அவர்கள் சில சாசனங் களையும் மற்ற நூல்களையும் ஆராய்ந்து ''சாச னத் தமிழ்க் கவி சரிதம்'' என்ற தமது நூலில் ''அருணகிரிநாதர்'' என்ற நீண்ட கட்டுரை யொன்று எழுதினுர். அய்யங்கார் அவர்கள் முற்றிலும் வேறான ஆதாரங்களைக் கொண்டு

தமது ஆராய்ச்சியை நடத்திய போதிலும் அவரும் கோபிநாத ராவ் வந்த முடிவிற்கே வந்தது குறிப்பிடத்தக்கது விருப்பு வெறுப் பற்ற முறையில் செய்யப்படும் எந்த ஆராய்ச்சி யின் முடிவும் ஒன்றாகவே இருக்கும் என்பதற்கு இது ஒரு சான்றாகும்.

பிரவுட தேவ மகாராஜர் :

''உதய தாம மார்பான பிரபுட தேவ
மாராயன்
உளமுமாட வாழ் தேவர் பெருமானே''

என்று அருணகிரியாலேயே போற்றப் பெற்ற மன்னர் யாவர்? இவ்வரசர் கி. பி. 1421 முதல் முதல் 1448 வரை விஜயநகர சாம்ராஜ்யத்தை ஆண்டுவந்த இரண்டாம் தேவராயர் (Deva Raya II) என்பது ஆராய்ச்சியாளர் துணிபு. இவர் சிறந்த புலவர் இவர் தமிழ்மொழியை அடுத்திருந்தது சந்தேகமேயெனினும் திருவண் ணாமலையை இரண்டாம் தலைநகராகக் கொண்டு ஆண்டபொழுது தமிழ்ப் புலவர்கள் பலரை ஆதரித்தவர், இல்லாவிடில் ''மானிடம் பாடாத நாவல''ராகிய அருணகிரிநாதர் இம் மன்னரைத் தமது திருப்புகழில் அமைத்துப் பாடியிருக்கமாட்டார். மேலும், எட்டு மொழி களில் பண்டிதரான அருணகிரி வடமொழியில் ''ஸோவல்லி யோகானந்த பிரஹஸனம்'' ''வீரபத்திர விஜயம்'' ஆகிய இரு நாடகங்களை யும் இயற்றியுள்ளார். அருணகிரிநாதருடைய குமாரரான இராஜநாதர் விஜயநகர சாளுக்கிய மன்னர்களைச் சிறப்பித்து எழுதிய நூல் ''சாளுவ அப்யுதயம்''

திருப்புகழின் இசைச்சிறப்பு

தென்னாட்டு இசைத்துறையில் திருப்புகழ்ப் பாடல்கள் வகிக்கும் ஸ்தாபனம் வேறு ஒரு பக்தி இலக்கியமும் வகிக்கவில்லை என்பது மிகை யாகாது இவற்றின் மெட்டுக்கள் அடிக்கடி மாற்றப்பட்டுவந்த போதிலும் பாடல்களின் கவர்ச்சி என்றுமே மாறுவதில்லை. நமது சங்கீ தத்தில் அறியப்பட்டவையும் அறியப்படாத வையுமான எண்ணற்ற தாளங்களுக்கும், சந்தங் களுக்கும் கருவூலம் போல் திகழ்வது திருப்புகழ்.

''பூத வேதாள வகுப்பு'' என்ற பகுதியில் அருணகிரி நாதரே சுமார் இருபது இராகங்களை யும், எட்டு தாளங்களையும், பற்பல இசைக் கருவிகளையும். நாட்டியம் முதலியவற்றையும் குறிப்பிட்டிருக்கிறார் சுமார் 600 ஆண்டு களுக்கு முன் தமிழ்நாட்டில் வழங்கி வந்த இராகங்களையும் தாளங்களையும் அறிந்து கொள்ள இப்பகுதி நமக்குப் பெரிதும் உதவு கிறது. அருணகிரிநாதர் குறிப்பிட்டுள்ள இராகங்களாவன;

| | | | |
|---|---|---|---|
| வராளி | பைரவி | பௌளி | தேசி |
| சிகண்டி | லலிதா | வராடி | குறிஞ்சி |
| சீசாமரம் | கௌசிகம் | படமஞ்சரி | இந்தளம் |
| விபஞ்சி | கௌளி | தனுசி | சுவடி |
| கௌடி | மலகரி | பஞ்சமம் | ஸ்ரீராகம் |

தாளங்களுள் சச்சத்புடம் சாசபுடம், சட்பிதா புத்திரிகம், சம்பத் வேஷ்டகம், உற்சவ தாளம், தர்ப்பண தாளம், சர்ச்சரி தாளம் ஆகிய வற்றைக் குறிப்பிடுகிறார்.

**கவிதையும் தத்துவமும்**

தாயுமானவரால் "வாக்கிற் கருணகிரி" என்று போற்றப்பட்ட அருணகிரிநாதர் வரகவி. முத்தமிழின் பொலிவும் இவரது திருப்புகழில் அடங்கியுள்ளன புராணங்கள், இதிகாசம், வேதாந்தம், காவியங்கள், கலைகள் முதலியவற்றில் அவருக்கிருந்த பாண்டித்தியத்தைப் பார்த்தால் அவரை நாம் ஒரு "சகல கலா வல்லபர்" என்றே அழைக்கவேண்டும். இசையுடன் கலந்து அவருடைய கவிதை வெள்ளமெனப் பெருகும் பொழுது அதைக் கேட்டு யாவரும் உருகாமல் இருக்கமுடியாது தணிகைமணி செங்கல்வராய பிள்ளையவர்கள் அரும்பாடுபட்டுச் சேகரித்து நமக்கு அளித்துள்ள 1300 பாடல்களும் தமிழ் மொழியின் சிறந்த பாக்கிஷம் ஆகும்

முருகன் ஒருவனையே வழிபட்டவர் அருணகிரி. ஆயினும் எல்லாமுமாகி நின்ற தத்துவமே முருகன் என்று அவர் கூறுகிறார். எல்லாத் தெய்வங்களும் முருகன் என்பதே அவர் துணிவு 'ஆதி பரம் பொருளே அறுமுக வேள்' என்று குமரனை வழிபட்டார். "பெம்மான் முருகன் பிறவான் இறவான்" என்றும் "அழியா நிலை தந்தருள் சேவலனே' என்றும் 'மறை நாயகனே' என்றும் கூறி குமரக் கடவுளே பரம் பொருள் என்று வற்புறுத்துகிறார். அநுபூதிச் செல்வராகிய அருணகிரி தனியாக ஒரு சமயத்தையும் போதிக்கவில்லை 'கௌமாரம்' என்று அழைக்கப் பெறும் முருகப்பெருமானின் மதத்தையே பிரசாரம் செய்து, அவனது அடியார்கள் தமிழ் வேதம் என்று போற்றி பாராயணம் செய்து வரும் திருப்புகழைப் பாடியருளிய அருணகிரி நாதரின் அறுநூறாவது ஆண்டு விழா தமிழர்களுக்கு ஒரு புனிதத் திருவிழாவாகும்

**முத்துஸ்வாமி தீக்ஷிதர்**

வைத்தீசுவரன் கோயில் முருகப் பெருமானின் அருளினாலேயே பிறந்து, திருத்தணிகை முருகனின் அருளினால் சிறந்த கவியாகவும் வாக்கேயகாரராகவும் திகழ்ந்து, முருகனின் திருநாமமாகிய "குருகுஹ" என்பதையே தமது கிருதிகளில் முத்திரையாக அமைத்த முத்துஸ்வாமி தீக்ஷிதரவர்கள் அருணகிரிநாதருக்குப் பின் சரியாக 400 ஆண்டுகள் கழித்துப் பிறந்தவர். "சங்கீத மும்மூர்த்திகள்" என்று அனைவராலும் ஒருமனதாக அழைக்கப்பெறும் சிறப்பு வாய்ந்த மூன்று அவதார புருஷர்களுள் ஒருவர். இவருடைய தந்தையாராகிய ராமஸ்வாமி தீக்ஷிதர் வாய்ப்பாட்டிலும்' வீணை வாசிப்பதிலும், கிருதிகள் இயற்றுவதிலும் சிறந்து விளங்கியவர். முத்துஸ்வாமி தீக்ஷிதருக்கு இளம் வயதிலேயே வேத அத்யயனம், காவிய நாடக அலங்காரங்கள் முதலியவற்றில் அளிக்கப்பட்ட பயிற்சியைப் போல் பதின்மடங்கு சிட்சை சங்கீதத்தில் அளிக்கப் பெற்றது. பின்னர் அவர் சிதம்பர நாத யோகி என்ற பெரியவருடன் காசிக்குச் சென்று, அங்கு ஐந்து ஆண்டுகள் வசித்து' மந்திர சாஸ்திரத்தைப் பயின்று ஸ்ரீ வித்யா மந்திரோபதேசமும் பெற்றார்.

தமிழ்நாடு திரும்பியதும் தீக்ஷிதர் நேராக திருத்தணி சென்று தமது குருநாதரின் இஷ்ட தெய்வமான முருகனை உபாசனை செய்யக் கருதி ஸுப்ரமண்ய ஷடக்ஷரி மந்திர ஜபத்தை ஒரு மண்டல காலம் (48 நாட்கள்) செய்தார் கடைசி நாளன்று அவர் தியானத்தில் இருந்த

பொழுது ஒரு முதியவர் அவர் முன் தோன்றி, வாயைத் திறக்குமாறு கூறி, அதில் ஒரு கற் கண்டுத் துண்டைப் போட்டுவிட்டு மறைந்தார். இவ்வனுபவத்தால் மெய்சிலிர்த்த தீக்ஷிதர் மாயாமாளவகௌள இராகத்தில் ''ஸ்ரீ நாதாதி குருகுஹோ ஜயதி ஜயதி'' என்ற தமது முதல் கிருதியைப்பாடி முருகப்பெருமானை துதித்தார். மிகவும் ருசிகரமான இந்த கிருதி பின்னர் அவர் இயற்றவிருந்த நூற்றுக்கணக்கான பாடல் களுக்கு வழி வகுத்ததுபோல் அமைந்தது பிற் காலத்தில் அவர் பற்பல தெய்வங்களைக் குறித்து ஒரே பக்தி பரவசத்துடன் கிருதிகள் பாடிய போதிலும், முருகனின் துதியாகிய இந்த முதற் பாடலில் வரும் ''குருகுஹ'' என்ற பதமே அவ ருடைய முத்திரையாக அமைந்தது கிருதியில் ராகத்தின் பெயரை அமைக்கும் முறையும் இதி லிருந்தே தொடங்கியது இத்த கிருதி முழுவ துமே முதல் வேற்றுமைப் பதங்களால் அமைக் கப்பட்டுள்ளது. பிறகு தீக்ஷிதர் வடமொழியின் மற்ற ஏழு வேற்றுமைகளில் ஏழு கிருதிகளை இயற்றி ''திருத்தணி ஸுப்ரமண்ய கீர்த்தனைத் தொகுதி'யைப் பூர்த்தி செய்தார். இந்த 'வேற் றுமை அமைப்பை''ப் பின்பற்றி இதர மூர்த்திக ளின்பேரிலும் தொகுதி கீர்த்தனைகளை பாடினார்.

### தல யாத்திரையில் மோகம்

திருத்தணியிலிருந்து புறப்பட்ட தீக்ஷிதர் காஞ்சிபுரத்தில் நான்கு வருடங்கள் வசித்து, உபநிஷத பிரம்மம் என்ற மகானுடன் வேதாந்த விசாரணை செய்து, அங்குள்ள தெய் வங்கள் மீது பல அரிய கிருதிகளைப் பாடினார். இதற்குப்பிறகு அவருடைய ஜீவ யாத்திரையை ஒரு தல யாத்திரை என்றே கூறவேண்டும். அருணகிரிநாதருக்கும் முத்துஸ்வாமி தீக்ஷிதருக் குமுள்ள பல ஒற்றுமைகளுள் தல யாத்திரை செய்யும் மோகம் முக்கியமானதாகும். அருண கிரிநாதர் இந்தியாவிலும் இலங்கை நாட்டிலும் முருகக் கடவுள் கோயில் கொண்டிருக்கும் தலங் களையெல்லாம் நமது திருப்புகழ் கவிமணி களால் இழைத்து அலங்கரித்தார். தீக்ஷிதரோ தென்னாட்டிலும் வட இந்தியாவிலுமுள்ள நூற்றுக்கணக்கான ஆலயங்களை தரிசித்து அங் குள்ள மூர்த்திகளை தெய்வபேதமின்றி தமது கிருதிகள் மூலம் போற்றினார். தியாகராஜர், சியாமா சாஸ்திரி முதலியோர் சில க்ஷேத்திரங் களைக் குறித்து கிருதிகள் அனைத்துமே ''க்ஷேத் திர கிருதிகள்'' என்று கூறலாம். ஒவ்வொரு கிருதியிலும் க்ஷேத்திரத்தின் மகிமை, மூர்த்தி யின் வருணனை, புராண வரலாறு, ஐதீகங்கள் முதலியவை அடங்கியுள்ளன

### திருவாரூரில் இசை வெள்ளம்

பல ஊர்களில் வசித்த முத்துஸ்வாமி தீக்ஷிதரை மிகவும் கவர்ந்தது அவருடைய பிறந்த ஊராகிய திருவாரூரே. அங்கு அவர் பல வருடங்கள் வசித்து, சங்கீத குருகுலம் நடத்தி, பல சிஷ்யர்களுக்கு இசை கற்பித்து, திருவாரூரிலும் பக்கத்தில் உள்ள தலங்கள் அனைத்திலுமுள்ள தெய்வங்கள் மீது கிருதிகள் பாடி வழங்கினர். தம்மிடம் பக்தி பூண்டு ஒழுகிய கமலம் என்ற தேவதாசியின் அரங்கேற்றத்திற்காக தீக்ஷிதர் தெலுங்கு மொழியில் ''ரூபமு ஜூசி'' என்ற (தோடி ராக) பத வர்ணத்தையும் ''நீ ஸாடி தைவமு'' என்ற (ஸ்ரீ ரஞ்சனி ராக) தருவையும் தியாகேசர் துதியாக இயற்றியளித்தார். அச்சமயம் அங்கு வந்திருந்த பொன்னய்யா, சின்னய்யா, வடிவேலு, சிவானந்தம் ஆகிய ''தஞ்சை நால்வர்'' தீக்ஷிதரைத் தஞ்சாவூரில் வந்து வசிக்குமாறும் தங்களை சிஷ்யர்களாக ஏற்றுக்கொள்ளுமாறும் வேண்டிக்கொண்டனர். தம்முடைய மற்றொரு சிஷ்யராகிய சுத்த மத்தளம் தம்பியப்பன் என்பவரின் தீராத வயிற்று நோய் தீரும்படி குரு கிரகத்தைத் துதித்து கிருதி இயற்றிய தீக்ஷிதர் பின்னர் மற்ற கிரகங்களின் மீதும் கிருதிகள் பாடி நவக்கிரக கீர்த்தனைத் தொகுதியை பூர்த்தி செய்தார். இவற்றின் சங்கீதச் சிறப்பும், சாகித்திய அழகும் மிக உயர்ந்தவை. முதல் ஏழு கிருதிகள் ஸுளாதி ஸப்த தாளங்களில் வரிசையாக அமைக்கப் பெற்றுள்ளன.

தஞ்சை நால்வரின் வேண்டுகோளை மறக்காத தீக்ஷிதரவர்கள் 1817ம் ஆண்டுக்குப் பின்னர் தஞ்சை சென்று அங்கு சில காலம் வசித்தார். சியாமா சாஸ்திரிகள் வசித்த தெருவிலேயே ஜாகை ஏற்படுத்திக்கொண்டு அவருடன் அளவளாவி, சங்கீத சம்பந்தமான பல சர்ச்சைகள் புரிந்தார். தமது புதிய சிஷ்யர்களுக்கு வேங்கடமகியின் 72 மேள கர்த்தா அமைப்பைக் கற்பிக்கும் பொருட்டு பிருகதீசுவரர் பேரிலும் பிருகந்நாயகி பேரிலும் விவாதி மேளங்களில் சிறு சிறு கிருதிகள் இயற்றி பொதித்து, தஞ்சை நால்வரின் இசைக்கு மெருகு ஏற்றிக்கொடுத்தார்.

### எட்டயபுரமும் முக்தியும்

தஞ்சையில் சுமார் ஐந்துஆண்டுகள் வசித்த பின்னர் தீக்ஷிதர் தமது தம்பிகளான சின்னஸ்வாமி, பாலஸ்வாமி ஆகிய இருவரைக்காணக் கருதி மதுரைக்குச் சென்றார். அங்கு சின்னஸ்வாமி காலகதி யடைந்த செய்தி கேட்டு வருந்தினர். ஆயினும் தமது வழக்கம்போல் மதுரையிலும் பக்கத்திலுள்ள தலங்களிலுமுள்ள தெய்வங்களைப் பற்றி சிறந்த கிருதிகளைப் பாடினர். பாலஸ்வாமியைத் தேடிக்கொண்டு ராமேசுவரம் வழியாக எட்டயபுரம் நோக்கிப் புறப்பட்டார். சாத்தூரை அடைந்ததும், எட்டயபுரம் அரசர் தமது தம்பியை ஆதரித்து வருவதையும் அவருக்குத் திருமணம் ஏற்பாடு செய்திருப்பதையும் அறிந்து அவ்வரசர்மீது மேகரஞ்சனி ராகத்தில் ''வேங்கடேஸ்வர எட்டப் பூபதிம்'' என்ற கிருதியைப் பாடி அவரை வாழ்த்தினர். எட்டயபுரம் செல்லும் வழியில் இருபுறமும் வயல்கள் மழையின்றி வறண்டு கிடந்ததை கண்ட தீக்ஷிதர் மனமிரங்கி தேவியைத் துதித்து அம்ருதவர்ஷிணி இராகத்தில் ''ஆனந்தாம்ருதவர்ஷிணி'' என்ற கிருதியைப் பாடவும், சிறிது நேரத்தில் பெரு மழை பெய்தது என்று அவரை பற்றிய சரித்திரம் கூறுகிறது.

எட்டயபுரம் மன்னரால் போற்றி வணங்கப்பெற்ற தீக்ஷிதர் தமது தம்பியின் திருமணத்தைக்கண்டு களித்து, மன்னரின் வேண்டுகோளின்படி அங்கேயே தமது இறுதி நாட்களைக் கழிக்கத் தீர்மானித்தார் 1835-ம் ஆண்டு தீபாவளிக்கு முதல் நாள் தீக்ஷிதருக்கு காசி அன்னபூர்ணியின் தரிசனம் மனக் கண்முன் கிடைக்கவும் தமக்கு நிர்யாண காலம் அணுகுவதை உணர்ந்தார். ''ஏஹி அன்னபூர்ணே'' என்ற கிருதியைப் பாடி, பூஜையை முடித்தபின்னர் தமது சிஷ்யர்களை அழைப்பித்து ''மீனுக்ஷி மேமுதம்'' என்ற கிருதியைப் பாடச் சொன்னார். அவர்கள் அதை பாடிக்கொண்டிருக்கையிலேயே தீக்ஷிதர் முக்தியடைந்தார் மன்னரின் உத்தரவின்பேரில் அவருக்கு ஞாபகச் சின்னம் எழுப்பப் பெற்றது சமீப காலத்தில் அது புதுப்பிக்கப்பெற்று மிக்களழிலுடன் விளங்கிக்கொண்டிருக்கிறது

## இசைக்கு அழியாத் தொண்டு

தீக்ஷிதரவர்கள் கர்நாடக சங்கீதத்திற்கு புரிந்துள்ள சேவை உலகில் நமது சங்கீதம் உள்ளளவும் நிலைத்து நிற்கும் தொண்டாகும். நூற்றுக்கணக்கான கிருதிகளையும், ஐந்து ராக மாலிகைகளையும், பத வர்ணம், தரு, நோட்டுஸ்வர சாகித்யங்கள் முதலியவற்றையும் இயற்றி வேங்கடமகியின் இசை முறைக்கு அழியாத வடிவங்களைப் படைத்தார் பற்பல இராகங்களின் வடிவங்களை நாம் தீக்ஷிதரவர்களின் கிருதிகளைக் கொண்டே அறிந்துகொள்ள முடிகிறது வீணையின் கமகக் குழைவுகளும், விளம்ப கால ராக ஆலாபனையின் சுகானுபவமும் அவரது கிருதிகளின் விசேஷச் சிறப்புகள் ஆகும். மற்ற வாக்கேயகாரர்கள்போல் அல்லாமல், பல்லவி, அனுபல்லவியில் வரும் தாது என்ற இசை அமைப்பு சரணத்தில் வராத விதத்தில் தீக்ஷிதர் தமது கிருதிகளை அமைத்துள்ளார் ஸமஷ்டி சரணம் என்ற ஒரு விசேஷ அம்சமும் இவருடைய கிருதிகளில் காணப்படுகிறது. பதினுன்கு இராகங்களில் அமைந்த ''ஸ்ரீ விச்வநாதம்'' என்ற இராகமாலிகை மிக அழகிய ஒரு படைப்பாகும்.

அத்வைத அனுபவத்தில் மூழ்கித் திளைத்து வந்தவர் தீக்ஷிதர். சாந்தி, ஆனந்தம் என்ற இரு நிலைகளிலிருந்து இறைவனைத் துதித்தவராதலின் இவருடைய கிருதிகளில் உணர்ச்சி வெள்ளத்தையோ, நவரசங்களின் பெருக்கையோ நாம் எதிர்பார்க்க முடியாது

ஓரிரண்டு கிருதிகளைத்தவிர, தீக்ஷிதரின் பாடல்கள் அனைத்தும் தூய சம்ஸ்கிருதத்தில் உள்ளன எதுகை, மோனை முதலிய அலங்காரங்கள் செறிந்தவை மந்திர சாஸ்திரத்தை தன்னகத்தே கொண்டவை. பாடுபவர்களுக்கும் கேட்பவர்களுக்கும் இறைவன் அருள் முதலிய பல நன்மைகளைத் தரக்கூடியவை

முருகன் அருள் பெற்ற அருணகிரிநாதர், முத்துஸ்வாமி தீக்ஷிதர் ஆகிய இரு மகான்களின் விழாக்களை இவ்வாண்டு தமிழ்நாடும் இசையுலகும் பரக்கக் கொண்டாடுவது மிகப் பொருத்தமாகும்.

# உப்பிலியப்பன் கோவில்

— C. பட்டாபிராம், B. A.,

இந்த புண்ய க்ஷேத்திரம் கும்பகோணத்திற்கு அருகில் மூன்று கல் துலேயில் உள்ளது. இது ஒரு பிரபலமான பிரார்த்தனை ஸ்தலம். வசதியாக பஸ்ஸிலோ, காரிலோ செல்லலாம். கும்பகோணத்தை அடுத்த திருநாகேஸ்வரம் ஸ்டேஷனில் இறங்கியும் செல்லலாம் போகும் வழியில் உள்ள சிவன் கோவிலை திரும்பிவரும் பொழுது சாவகாசமாக தரிசிக்கலாம்,

இந்த திவ்ய க்ஷேத்திரத்திற்கு பொய்கை ஆழ்வார், பேயாழ்வார், நம்மாள்வார், திருமங்கையாழ்வார் வந்து பெருமாளை வணங்கி இவ்வூரை திருவிண்ணகர் என்று மங்களாசாசனம் செய்திருக்கிறார்கள். நம்மாழ்வார் ''சிகர மாடங்கள் சூழ்திருவிண்ணகரம்'' என்று பாடி இருப்பதால் அக்காலத்தில் இது ஒரு பெரிய நகரமாக இருந்திருக்கவேண்டும். இந்தக் கோயில் பிரமனே அமைத்து வழிபட்டதால் விண்ணகரம் என்று அழைக்கப்பட்டது என்று ஸ்தல புராணம் கூறுகிறது பிரம்ம தேவனே இங்கு வந்து பிரம்மோற்ஸவம் நடத்தினதாகவும் ஐதீகம், நம்மாழ்வாரும் ''தேவர் மேவித்தொழும் திருவிண்ணகர் சேர்ந்தபிரான்'' என்று துதிக்கிறார். இங்குள்ள அஹோராத்திர புஷ்கரணி விசேஷமானது, இதில் ராத்திரியிலும் கூட நீராடி முக்தி பெறலாம். திருவிண்ணகரப்பன் காவிரிதீரத்தை நாடி வந்ததால் இவனை தரிசிக்க ஓடி வந்ததால் இவனை தரிசிக்க ஓடிவந்த புண்ய நதிகள் இங்கு வந்து தங்கிவிட்டன. ஆகையால் நாம் இங்கு தக்ஷிண கங்கை, தக்ஷிண யமுனை, தக்ஷிண கோதாவரி நதிகளைக் காண்கிறோம். இவைகளை இப்பொழுது நட்டாறு, கீர்த்திமான் ஆறு, அறசிலாறு என்று அழைக்கிறார்கள்.

நேராக கோவிலிற்குள் சென்று கருவரையை அடைந்தால் சர்வாலங்கிருத பூஷணராக பூமிதேவி மார்க்கண்டேய முனிவருடன் திருவிண்ணகர் அப்பன் காக்ஷி அளிக்கிறான் வெகு அழகான மூலபேரம். ஆஜானுபாஹு. கிட்ட தட்ட எட்டடி உயரம் கம்பீரமான தோற்றம் அழகிய அன்பு சுரக்கும் மந்தஹாச முகம், இரண்டு கைகளில் சங்கு சக்கரம், ஒரு கைஅறையில் பொருந்த மற்றொருகை கன்னிகா தானம் ஏற்கும் முறையில் அமைந்திருக்கிறது. இங்கு அம்பாளுக்கு தனி சந்நிதி கிடையாது. அருகில் இருக்கும் பூமி தேவியின் சிற்பமும் அழகானது. இந்த அழகனை கண்டுகளித்து திருமங்கை ஆழ்வார் '' துறப்பே னல்லேன் இன்பம் துறவாது நின் உருவம் மறப்பே னல்லேன்'' என்று பாடுகிறார். பிள்ளைப்பெருமாள் ஐயங்கார் இந்த சுந்தர வடிவைக்கண்டு,

'' கையும் உரையும் கருத்தும் உனக்கே அடிமை
செய்யும் படி நீ திருத்தி னாய் — ஐயா!
திருவிண்ணக ராளா! சிந்தையிலும் எண்ணேன்
பெருவிண்ணகராளும் பேறு.''

என்று பாடி இனி தனக்கு வைகுண்ட சாம்ராஜ்ய பதவி கிட்டினாலும் அதை மனதாலும் நினைக்கமாட்டேன் என்கிறார்.

அருகில் உள்ள உற்சவரும் வெகு அழகான படிமம் இந்த மூர்த்திகளின் அழகை அனுபவித்து நம்மாள்வார் :

'' என்னப்பன், எனக்கா யிருளாய் என்னைப் பெற்றவளாய்ப்
பொன்னப்பன், முத்தப்பன், என்னப்பனுமாய்
மின்னப் பொன்மதில் சூழ், திருவிண்ணகரை சேர்ந்தவப்பன்
தன்னொப்பாரில் லப்பன் தந்தனன் தன தாள் நிழலே.''

என்று வாயாரப் பாடித் துதிக்கிறார், தன்னை ஒப்பர் இல்லாத அப்பனாக பாடினது பின் காலத்தில் உப்பிலி அப்பனாக மறுவி ஊரே உப்பிலி அப்பன் சோவில் ஆய்விட்டது. அதற்கேற்ற புராண காதையும் வந்து சுவாமிக்கு உப்பில்லாத நைவேத்தியமும் வழக்கமாய் விட்டது. ஸந்நிதியின் உட் கட்டிடத்திற்கு வெளியே வட

# நாணுக்கு உறைபதி

—கவிஞர் வி. துரைசாமி

மக்கட்குரிய உயர்பண்புகளில் நாணுடைமை மிக்குச் சிறந்ததென வள்ளுவர் வகுத்துரைப்பர். திருக்குறளில் நாணுடைமை என்ற அதிகாரத்தின் முகப்பில் அச்சொற்றொடருக்கு உரை கூறப் புகுந்த பரிமேலழகர், ''சால்பு, பண்பு முதலிய குணங்களான் உயர்ந்தோர் தமக்கு ஒவ்வாத கருமங்களில் நாணுதல் உடையராந் தன்மை'' என உரைத்தார். எனவே பிறர் பழிக்கத் தக்க இழிசெயல்களைச் செய்ய நாணிதலே நாணமுடைமை எனப்படும் இதனையே,

''புகழெனின் உயிரும் கொடுக்குவர்
பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர்,'

எனப் புறநானூறு புகல்கிறது.

இனி, சான்றாண்மைக்கு இருப்பிடமான உயர்ந்தோர், தம்பழிக்கு நாணுதலேயன்றிப் பிறர்க்கு வந்த பழியையும் தமக்கு வந்தது போலப் பாவித்து நாணமுறுவர். இக் கருத்தினைத் திருவள்ளுவர்,

''பிறர்பழியுந் தம்பழியும் நாணுவார்
நாணுக்
குறைபதி என்னு முலகு''

என்ற குறட்பாவில் விளக்கியருளினர். இத்தகையோரை நாணத்தின் உறைவிடம் என்று உயர்ந்தோர் போற்றிப் புகழ்வர் என்பது திருவள்ளுவரின் கருத்தாகும். இவ்வரிய பண்பாகிய நாணத்தின் உறைவிடமாக விளங்கும் ஒப்பற்ற கதாபாத்திரம் ஒன்றை இங்கு சற்றுச் சிந்திப்போம்.

வாலிக்கு அஞ்சி மலையில் ஒளித்து வாழும் சுக்கிரீவன் அனுமனால் அழைத்து வரப்பட்ட இராம இலக்குவரைக் கண்டு, ''ஆறு கொள் சடிலத்தானும் அயனும் என்று இவர்கள் ஆதி

---

புறத்தில் புஷ்கரணிக்கு எதிரே தனியாக என்னப்பன் சந்நிதியும் தென்புறத்தில் மணி அப்பன் சந்நிதியும் விளங்குகிறது.

இனி நாம் அப்பர், சுந்திரர், சம்பந்தர் மூவராலும் வணங்கி தேவாரத்தில் பாடப்பட்ட திருநாகேஸ்வரம் கோவிலிற்குள் செல்வோம். விஷ்ணு கோவிலிற்கு சற்று துலையில் உள்ளது அப்பர், ''திருநாகேச்சரத் துள்ளானை சேராதார் நன்னெறிகள் சேராதாரே.'' என்று பாடுகிறார்,

கோவில் மிகப் பெரியது. அழகானது. இங்கு அம்பாள் தவக்கோலம். நூற்றுக்கால் மண்டபம் தேர்போல் அமைக்கப்பட்டு கல் சக்கரங்கள் பொருத்தப்பட்டுள்ளன அடிவரிசையில் பரதநாட்டியத்தை விளக்கும் பல அழகிய சிற்பங்கள் உள்ளன இந்த கோவிலிற்கு வந்து சந்திரன், சூரியன், நாகம் வழிபட்டதை அப்பர்,

'' சந்திரனொடு சூரியர்தாம் உடன்வந்து சீர்
வழிபாடுகள் செய்தரின்
ஐந்தலை அரவின் பணிகொண்டு அருள்
மைந்தர்போல்மேனி நாகேச்சுரரே''

என்று தேவாரப் பாட்டில் குறிப்பிடுகிறார். சண்பகாரண்யேஸ்வரரை வெகு அழகாக அப்பர் ''மதிப்பவர் மனத்துள்ளான்'' என்று குறிக்கிறார்.

சேக்கிழாருக்கு இந்தக் கோவிலின் மேல் பக்தி அதிகம். தன் சொந்த ஊராகிய சென்னைக்கு அடுத்த குன்றத்தூரில் ஒரு சிவன் கோவிலில் கட்டுவித்து அதற்கு திருநாகேஸ்வரம் என்று பெயரிட்டிருக்கிறார் இந்த ஸ்தலத்தில் வழிபட நாகராஜனுக்கும், சேக்கிழாருக்கும் இக் கோவிலிற்குள் தனி கோவில்கள் கட்டி மக்கள் வழிபடுகிறார்கள். இக்கோவில் வெகு புராதனமானது. இதில் 16 கல்வெட்டுகள் உள்ளன. அதன்மூலம் இக்கோவிலை கண்டராதித்தன் கட்டினதாக அறிகிறோம் திருவிண்ணகர், திருநாகேஸ்வரம் கோவில்கள் காவிரிப் பாசனத்தின் செழிப்பான பிரதேசத்தில் உள்ளன. சம்மந்தர், சுந்தரர், திருமங்கை இறை தமது பாடல்களில் குறிப்பிடுகிறார்கள், சுந்தரர்:

'' பங்கய மாமலர் மேல் மது உண்டு வண்
தேன்முரலது
செங்கயர் பாய் வயல்சூழ் திருநாகேச் சரத்
தானே''

என்று வெகு அழகாக குறிக்கிறார்.

வேறுள குழுவையெல்லாம் மானிடம் வென்றது' என விம்மிதமடைகிருன். 'சரண் உனேப் புகுந்தேன் என்னேத் தாங்குதல் தருமம்' என இராமபிரான் அடியில் வீழ்ந்து வணங்குகிருன். அதுகண்ட அண்ணலும், 'வானிடை மண்ணில் நின்னேச் செற்றவர் என்னேச் செற்ருர்; தீயரே எனினும் உன்னேடு உற்றவர் எனக்கும் உற்ருர் ஆவர். உன் கிளே எனது, என்காதல் சுற்றம் உன்சுற்றமாகும். நீ என் இன்னுயிர்த் துணேவன்' என அபயமளிக்கிருன். பின்னர் சுக்கிரீவன் இராம இலக்குவரை, 'போக பூமியையும் ஏயும் புதுமலர்ச் சோலே' ஒன்றிற்கு அழைத்துச்சென்று இனிய கனிமுதலாயவற்றை விருந்தினர்க்குப் படைக்கிருன் அப்போது இராமன் சுக்கிரீவடனிம், ''பொருந்தும் நன் மனேக் குரிய பூவையைப் பிரிந்துளாய்கொலோ நீயும்?'' என வினவ, அது கேட்ட அனுமன் வாலியின் இயல்பனேத்தும் எடுத்தியம்பி, ''உருமை என்று இவற்கு உரிய தாரமாம் அரு மருந்தையும் அவன் விரும்பினன், இருமையும் துறந்து இவன் இருந்தனன்'' என்று கூறக் கேட்டதும், அளவற்ற சினத்தால் இராமனது 'வையம் நுங்கிய வாயிதழ் துடித்தது, மலர்க் கண் செய்ய தாமரை ஆம்பலம் போது எனச் சிவந்தன.' உலகனேத்தும் அவனுக்கு உதவியாக வந்தாலும் அவனே வில்லிடை வாளியால் அழித்து அவன் தலேமையோடு நின் தாரத்தையும் நினக்குத் தருகிறேன்; அவன் இருப்பிடத்தைக் காட்டுக என்று கூறுகிருன் இராமன்.

பின்னர் சுக்கிரீவனின் ஐயப்பாட்டைப் போக்க மராமரங்களேத் துளேத்து, இளவலேக் கொண்டு துந்துபியை எற்றச் செய்து வாலியிருக்கும் சூழலே அடைகின்றனர் அங்கு இராமபிரான் சுக்கிரீவனே நோக்கி, நீ சென்று வாலியைப் போருக் கழைப்பாயாக. நீவிர் இருவரும் போர் புரியும்போது யான் அம்பினேயெய்து அவனேக் கொல்லுவேன் என்றலும் சுக்கிரீவன் அவ்வாறே ஆரவாரஞ்செய்து அண்ணனேப் போருக்கழைக்கிருன், தம்பியின் போர் ஆரவாரத்தைக் கேட்ட வாலி விரைந்து போருக் கெழும்போது அவன் மனேவியாகிய தாரை என்று உமுதிற் ருேன்றிய வேயிடைத் தோளி'' தன் கணவனேத் தடுக்கிருள். 'விலக்கலே விடு விடு' என்ற வாலிக்கு, முன்பு தங்களிடம் தோற்று அஞ்சி ஒளிந்தவன் இப்போது வலிய வந்து அழைப்பது நெடுந்துணே உடைமையால் என்றும், உம் தம்பிக்கு இன்னுயிர் நட்பமைந்து இராமனென்பவன் வந்துள்ளானெனவும் கூறுகிருள் அது கேட்ட வாலி, உலகினுக்கு அறத்தின் ஆறெலாம் இழைத்த இராமனுக்கு இயல்பல்லாதவற்றைக் கூறினே. 'பிழைத்தனே பாவி உன் பெண்மையால்' என்று இடித்துரை கூறிக் கிளம்புகிருன். தம்பியர் அல்லது தனக்கு வேறு உயிர் இல்லென எண்ணிய இராமன், எம்பியும் யானும் எதிர்ந்த போரில் இடையே அம்பு தொடுக்குமோ என்று வாலி தன் மனேவியிடம் கூறுவது, அவனுக்கு இராமன்பால் உள்ள பெருமதிப்பை புலப்படுத்துகிறது.

முதல் தடவை வாலியிடம் தோற்று ஓடி வந்த சுக்கிரீவனுக்கு ஆறுதல் கூறி ஓர் மாலேயை அணிவித்து மீண்டும் போருக்கு அனுப்புகிருன் இராமன் இம்முறை வாலி சுக்கிரீவனே இரு கரத்தாலும் தூக்கி நிலத்திலே ஏற்ற முயலும் போது இராமபாணம் வாலியின் மார்பில் பாய்கிறது தூக்கிய தம்பியை அப்பாலெறிந்து விட்டுத் தன் மார்பைத் துளேத்து ஊடுருவும் அம்பினேத் தன் இரு கையாலும் வாலினுலும் பற்றி வெளியே இழுக்கிருன்- இச்செயலேக் கண்ட தேவர் முதலியோர் விம்மிதமெய்துகின்றனர். இவ்வம்பினே எய்தவர் யாரோ? இது சக்கரப் படையோ? நீலகண்டன் நெடுஞ் சூலமோ? அன்றேல் குன்றுருவும் முருகனது வேலோ? என்று ஐயுறுகிருன் பின்னர் அம்பில் பொறித்துள்ள பெயரை அறிவோம் எனப் பார்த்தபோது, மூவுலகுக்கும் மூலமந்திரமாயும் இம்மையே எழுமை நோய்க்கும் மருந்தாயும் உள்ள செம்மைசேர் நாமமாகிய இராம நாமத்தைக் கண்களில் தெரியக்கண்டான்.

தன்னல் நன்கு மதிக்கப்பட்டவன் ராமன், சற்று முன்பு தன் மனேவி தாரையைச் சினந்து, 'இருமையும் நோக்குறும் இயல்பினன்' என்றும் 'தருமமே தவிர்க்குமோ தன்னேதான்' என்றும் 'புன்தொழில் குரங்கொடும் புணரும் நட்பனே? என்றும்கூறிய வாலி இப்போது அவ் விராமனே இச்செயலேச் செய்துள்ளான் என்றறிந்ததும் அவனது மனநிலே எவ்வாறிருந்தது என்பதைக்

கம்பநாடர் சித்தரிக்கும் ஓர் பாடல் இங்கு சிந்திக்கத்தக்கது. அப்பாடலே வாலியை 'நாணுக்குறைபதி' யாக்குகிறது.

சாதாரண மனிதன் ஒருவனுக்கு இந்நிலை நேர்ந்திருந்தால் அவன் துக்கத்தில் மூழ்குவான். வலிமை பெற்றவன் ஒருவனுக்கு நேர்ந்தால் சினத்தால் கொதித்தெழுவான் ஆனல் வாலி இத்தகைய உணர்ச்சிகளைக் கொள்ளவில்லை மாருக, 'நகைவர நாணுட் கொண்டான்' எனருர் கம்பர். இல்லற வாழ்வைத் துறந்து மரவுரி முதலானவை தரித்துத் துறவியாகிக் கானக வாழ்வு மேற்கொண்டவரை 'நம்பி' என்று குறிப்பிடுவதில்லை நம்பி என்பது வீரம். ஆண்மை முதலியவற்றிற் சிறந்தானையே குறிப்பது. அங்ஙனமிருக்க வாலி, 'இல்லறந் துறந்த நம்பி' என்ற சொற்றொடரை உபயோகிக்கிருன். அடுத்து, கேவலம் குரங்குகளாகிய எங்கள் பொருட்டுத் தங்களது உயிர்போன்ற வில்லறத்தையே துறந்தவன் என்பதோடமையாது 'வீரன்' என்று இகழ்ச்சிக் குறிப்பால் அழைக்கிருன். 'இத்தகைய இராமன் பிறந்ததால் வேத நூலில் சொல்லப்படும் அறத்தினின்றும் பிறழாத சூரிய குலம் இன்று தொன்று தொட்டுப் பாதுகாத்துவந்த தனது நல்லறத்தைத் துறந்துவிட்டதே!' என அங்கலாய்க்கிருன். இவ்விழிசெயலைச் செய்த இராமனை எண்ணியதும் நகைப்புத் தோன்ற நாணங் கொண்டான்! இப்போது பாடலைக் காண்போம் :—

''இல்லறந் துறந்த நம்பி
எம்மனோர்க் காகத் தங்கள்
வில்லறந் துறந்த வீரன்
தோன்றலால் தேவ நன்னூல்
சொல்லறந் துறந்தி லாத
சூரியன் மரபுந் தொல்லை
நல்லறந் துறந்த தென்னு
நகைவர நாணுட் கொண்டான்''

வாலியின் மார்பிலிருந்து உதிரம் மலை வழங்கு அருவியைப் போலப் பெருக்கெடுத்தோடுகிறது 'உடன் பிறப்பென்னும் பாசத்தால் பிணிப்புண்ட அத்தம்பி'யாகிய சுக்கிரீவனும் நேசத் தாரைகள் சொரிதர நெடுநிலம் சேர்ந்து உணர்வழிந்தான்.

ஆனல் வாலியோ தன் மார்பிடை நுழைந்த இராம பாணத்தை ஊடுருவிச் செல்லாதபடி தடுத்து நிறுத்தியவன், இல்லறந் துறந்து தன் வில் அறத்தையும் துறந்த இராமனை யெண்ணி நகைவர நாணுட் கொண்டதோடமையாது வெட்கமடைகிருன், தலையைச் சாய்க்கிருன், வெடிபடச் சிரிக்கிருன். இச்செயலும் ஓர் உயர்ந்த அறச்செயலோ என நினைக்கிருன்! இதனைக் கம்பர்,

''வெள்கிடும் மகுடம் சாய்க்கும்
வெடிபடச் சிரிக்கும் மீட்டும்
உள்கிடும் இதுவும் தான் ஓர்
ஓங்கற மோ? என் றுன்னும்''

என வாலியின் செயல்களாக இசைத்தனர். 'இறைவனே முறை திறம்பினன் என்ருல் இழிந்தோர் நிலையை என்னென்பது!' என்று பலவாறுகத் தனக்குள் இயம்பிக் கொண்டிருக்கும் வாலியின் முன்னர் இராமன் தோன்றுகிருன்.

''அணியன்றே நாணுடைமை சான்றோர்க்கு? அஃதின்றேல், பிணியன்றே பீடு நடை'' என்ருர் திருவள்ளுவர். எனவே நாணுடைமையை அணியாகப் பெற்ற வாலி ''நாணுக் குறைபதி''யாகி, இராம காதையில் தன்னேரிலாச் சிறப்புடன் விளங்கக் காண்கிறோம். ●

# நீலகண்ட பிரம்மச்சாரி

ரா. அ. பத்மநாபன்

## ''இந்தியா''வும் புதுவை போயிற்று

பாரதியார் புதுவை போய்ச் சேர்ந்த சில தினங்களில் 'இந்தியா' ஸ்தாபகர் எஸ். என். திருமலாச்சாரியாரும், எஸ். ஸ்ரீநிவாஸாச்சாரியாரும், பத்திரிகை மானேஜர் எம்.பி திருமலாச்சாரியும் புதுவைக்குப் போனார்கள். எஸ். ஸ்ரீநிவாஸாச்சாரியார் அச்சு யந்திரங்கள் விற்பனை நிலையம் ஒன்று நடத்தி வந்தார். புதுவை போய், அங்கே 'இந்தியா' பத்திரிகையை, அச்சு யந்திரம் உட்பட, கொண்டு போவதற்கு என்ன செய்யலாம் என்று ஆலோசித்தார்கள்.

சென்னையில் 'இந்தியா'வை கவனிக்க யாருமே இல்லாததால், பாரதியார் சங்கரகிருஷ்ணன் மூலம் சொல்லியனுப்பியபடி, நீலகண்ட பிரம்மச்சாரி பத்திரிகையை வெளிக் கொண்டுவரும் பொறுப்பை ஏற்றுக் கொண்டார். ஏற்கனவே அவகாசம் கிடைக்கும் போதெல்லாம் 'இந்தியா' அலுவலகத்தில் பாரதியார்கூடப் பொழுதைப் போக்குபவரான நீலகண்டன், பாரதியாரின் யோசனைப்படி அவ்வப்பொழுது பத்திரிகைக்கு விஷயம் எழுதித் தந்ததுண்டு. 'இந்தியா' அலுவலக நடைமுறையும் அவருக்குப் பழக்கமானதே. ஆகவே, அவர் 'இந்தியா' பத்திரிகையின் இரண்டு வார இதழ்களை காலா காலத்தில் கொண்டுவந்தார்.

இதற்குள், புதுவையிலிருந்து செய்தி வந்து விட்டது. புதுவையில் எல்லாம் தயார், 'இந்தியா' அச்சு யந்திரம், அச்சக சாமான்கள், அலுவலக ரிஜிஸ்டர்கள் உட்பட எல்லாவற்றையும் மூட்டை கட்டி அனுப்புங்கள், என்று.

அதன்படி, ஃபோர்மன் மாணிக்கத்துடன் அச்சு யந்திரம் முதலிய யாவற்றையும் நீலகண்டன் புதுவைக்கு அனுப்பி வைத்தார். சென்னை 'இந்தியா'வின் அச்சு யந்திரத்தைப் புதுவையில் யாருக்கோ விற்று விட்ட பாவனையில், பிரிட்டிஷ் இந்திய அதிகாரிகளுக்குத் தெரியாமல் 'இந்தியா' அச்சகம் புதுவையில் போய்ச் சேர்ந்துவிட்டது. சில தினங்களில், புதுவையில் பதிவு செய்யப் பட்ட பத்திரிகையாக 'இந்தியா' பிரிட்டிஷார் மீது நெருப்புமாரி பெய்யத் தொடங்கியபின் தான் தாங்கள் ஏமாந்துபோன விஷயத்தை பிரிட்டிஷ் அதிகாரிகள் உணர்ந்தனர்.

## புதுவையில் நீலகண்ட பிரம்மச்சாரி

1908-ஆம் ஆண்டு சென்னையில் இருந்த அதிகார கெடுபிடியில், நீலகண்ட பிரம்மச்சாரி தாமும் புதுச்சேரி போய்விடலாமா என்று யோசித்தார். அதன்படி, 1908 ஆகஸ்ட் மாதம் அவர் முதல் தடவையாகப் புதுவைக்குப் போனார். அவருடைய வலது கை போன்ற சங்கரகிருஷ்ணன் ஏற்கனவே புதுவையில். பாரதியாரின் குடும்பத்தாருடன் தங்கியிருந்தார்.

புதுவையில் சிறிது காலம் இருந்தபின், சங்கரகிருஷ்ணனை அழைத்துக் கொண்டு திருச்சி ஸ்ரீரங்கம் வரை நீலகண்டன் போய் வந்தார். சங்கரகிருஷ்ணன் கம்பீரமான நடையுடைபாவனை உடையவர். மேனாட்டு உடைகள் அணிந்து ஆங்கிலோ - இந்தியரென அவர் நடந்து கொள்வார். இருவரும், ஸ்ரீரங்கத்தில் அண்ணாச்சி ஐயங்கார் என்ற 'பண்டா'வின் விருந்தினராகத் தங்கியிருந்தார்கள். யாத்திரீகர்களுக்குக் குடியிருப்பு வசதியும் உணவு வசதியும் செய்து

கொடுத்து, காவேரி ஸ்நானம், கோயில் தரிசனம் முதலிய காரியங்களிலும் உதவி செய்து பிழைப்பவர்கள் 'பண்டா'க்கள். அண்ணுச்சி ஐயங்கார் தொழிலில் பண்டா; ஆனால், நீலகண்டனின் புரட்சி இயக்க ஆதரவாளர். அவர் மூலம் ஸ்ரீரங்கத்தில் சில தீவிர இளைஞர்களைச் சந்தித்துவிட்டு மீண்டும் புதுவை திரும்பினார் நீலகண்டன்.

### ''சூரியயோதயம்'' ஆசிரியர்

புதுச்சேரியில் 1908-இல் சைகோன் சின்னையாபிள்ளை என்று புகழ்பெற்ற அச்சுக்கூட முதலாளி இருந்தார். புதுவையில் அப்போது இருந்த அரசியலில் அவர் கலந்துகொள்வார் பொன்னு முருகேசம் பிள்ளை, கலவை சங்கர செட்டியார் என்ற இரு முக்கியமான புதுவைப் பிரமுகர்கள் தொடங்கிய தேசபக்தி கொண்ட பிரெஞ்சிந்தியக் கட்சிக்கு ஆதரவாக சின்னையாவும் இருந்தார். சின்னையா 'சூர்யோதயம்' என்ற பெயரில் தமிழ் வாரப் பத்திரிகை ஒன்று நடத்திவந்தார். பாரதியாரை ஆசிரியராகக் கொண்டு 'இந்தியா' புதுவையிலிருந்து செல்வாக்குடன் வெளிவருவதைக் கண்ட சின்னையா தமது பத்திரிகையையும் தீவிரமான கொள்கை கொண்டதாக்க விரும்பினார். இதற்கேற்ற ஆசிரியர் யார் என்று அவர் யோசித்த சமயம் புதுவையிலேயே நீலகண்டபிரம்மச்சாரி இருப்பதை அறிந்தார். கமலநாயகி' என்ற புனை பெயரில் புதுவை 'இந்தியா'வில் நீலகண்ட பிரம்மச்சாரி எழுதிவந்தார். சின்னையாவின் விருப்பப்படி, 'சூர்யோதயம்' ஆசிரியப் பொறுப்பை நீலகண்ட பிரம்மச்சாரி 1909 ஏப்ரல் மாதம் ஏற்றுக் கொண்டார்.

'சூர்யோதய'த்தில் தமது உதவி ஆசிரியராகப் பரலி சு. நெல்லையப்பன் என்ற இளைஞரை வேலைக்கு எடுத்துக் கொண்டார் நீலகண்டன். பத்திரிகை உலகில் நெல்லையப்பனது முதல் வேலை இது. 'சூர்யோதய'த்துக்காகப் புதுவை வந்த நெல்லையப்பனுக்கு பாரதியாரோடும் நெருங்கிப் பழக வாய்ப்பு ஏற்பட்டது. அந்த இளைஞரே பிற்காலத்தில் புகழ் மிக்க கவிஞராகவும் பத்திராதிபருமானார். நெல்லையப்பர் எடுத்து நடத்திய 'லோகோபகாரி' என்ற சென்னை வாரப் பத்திரிகையில், பாரதியாரின் கதை கட்டுரைகள் பல வெளியிடப் பட்டுள்ளன. பாரதியாரது நூல்கள் சிலவற்றை வெளியிட்ட பெருமையும் நெல்லையப்பருக்கு உண்டு.

### 'இந்தியா', 'சூர்யோதயம்' மீது தடை

புதுவையிலிருந்து இந்திய தேசியத்தைத் தீவிரமாக ஆதரித்தும் பிரிட்டிஷாரைத் தாக்கியும் வெளியாகும் 'இந்தியா', 'சூர்யோதயம்' என்ற வாரப் பத்திரிகைகளின் செல்வாக்கு நாள்தோறும் அதிகரித்து வருவதைக் கண்ட பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் 1910-ஆண்டு துவக்கத்தில் இவைகளைத் தடுக்க வழி செய்தனர். 'இந்தியா' வாரம் இருமுறையோ மும்முறையோ வரக்கூடிய அளவுக்கு ஆதரவு இருப்பதால், அதை அவ்வாறே கொண்டுவருவதென அதன் பொறுப்பை மேற்கொண்டிருந்த எஸ் ஸ்ரீநிவாஸாச்சாரியார் அறிவித்திருந்தார்.

இதே சமயம் புதுவையிலிருந்து 'விஜயா' என்ற தேசிய தினசரி ஒன்றையும் அவரது குடும்பம் நடத்திவந்தது

சைகோன் சின்னையாவின் அச்சகத்தில், 'கர்மயோகி' என்ற வேதாந்த, தேசபக்த மாதப் பத்திரிகையும் அச்சாகி வந்தது. இது பாரதியார் தமது சொந்தத்தில் நடத்திய உயரிய பத்திரிகை.

இந்தப் பத்திரிகைகளெல்லாம் புதுவையில் அச்சாகி வெளிவந்து கொண்டிருந்தாலும், இவைகளது சந்தாதார்களில் பெரும்பாலோர் பிரிட்டிஷ் இந்தியாவில்தான் இருந்தனர். விளம்பரதாரர்களும் பிரிட்டிஷ் இந்தியாவிலேயே இருந்தனர். புதுச்சேரி பிரெஞ்சுக்காரர் வசம் இருந்தாலும். அதன் தபால் ஏற்பாடு பிரிட்டிஷ் இந்தியாவசமே இருந்தது, இதைப் பயன்படுத்திக் கொண்டு, ''இந்தியா'' ''சூர்யோதயம்,'' ''விஜயா,'' ''கர்மயோகி'' முதலிய பத்திரிகைகளுக்கு வரும் கடிதங்கள், மணியாடர்கள், விஷயதானங்கள் முதலியவைகளைத் தணிக்கை செய்து தடுக்கலானார்கள்.

இதைத் தவிர்க்க, புதுவையிலிருந்த தேசபக்தர்கள் தங்கள் விலாசத்துக்கு அனுப்பாமல் சில உள்ளூர் வர்த்தக நண்பர்களின் விலாசங்களுக்குப் பணம் முதலியவைகளை அனுப்பச் செய்து பெற்றுவந்தார்கள். இது கொஞ்ச காலம் நடந்தது.

1910-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சென்னை அரசாங்கம் அச்சுச் சட்டத்தின்படி ஒரு உத்தரவு பிறப்பித்து, 'இந்தியா', 'சூர்யோதயம்', 'விஜயா' முதலிய பத்திரிகைகளின் பிரதிகள் பிரிட்டிஷ் எல்லைக்குள் வந்ததும் பறி முதல் செய்துவிடும்படி புதுவை-பிரிட்டிஷ் இந்தியா எல்லையில் கண்டமங்கலத்தில் இருந்த தங்கள் சுங்க அதிகாரிகளுக்கு ரகசிய உத்தரவு பிறப்பித்தார்கள். அவ்வாறே 'இந்தியா' முதலிய பத்திரிகைகளின் கட்டுக்கள் கண்டமங்கலம் வந்ததும் பறிமுதல் செய்யப்பட்டு சென்னை நகரிலுள்ள போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் அலுவலகத்துக்கு அனுப்பிவைக்கப்பட்டன.

சந்தாதார்களிடமிருந்து ஏராளமான புகார்கள் வந்தபோதுதான் பத்திரிகைகளுக்கு உண்மை புரிந்தது. அதற்குள் இரண்டு வாரப் பிரதிகள் போலீஸில் முடங்கி நஷ்டமாயின. இதற்குமேல் பத்திரிகைகள் நடத்துவது இயலாது என்று எல்லாப் பத்திரிகைகளும் மூடப்பட்டன. 1910 ஜனவரி முடிவில் 'சூர்யோதயம்' நிறுத்தப்பட்டது; மார்ச் மாத முதல் வார முடிவில் 'இந்தியா', 'விஜயா' நின்றன.

உலக மகாயுத்தம் ஒன்றை 1914-இல் தொடங்கி பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்கு முடிவு கட்டுவது என்ற ஜெர்மன் திட்டம் இதற்குள் ஒழுங்காக முன்னேறி வந்தது. யுத்தம் வரும் சமயம் இந்தியப் புரட்சி வீரர்கள் பெருமளவில் கலகம் நடத்துவதற்கு ஏராளமான ஆயுத தளவாடங்கள் இந்தியாவில் ரகசியமாகச் சேர்ப்பிக்கப்படும் என்பதை ஜெர்மன் அதிகாரிகள் 1910-ஆம் ஆண்டு துவக்கத்தில் ஊர்ஜிதம் செய்தார்கள். தமது கல்கத்தா தொடர்புகள் வழியாக இதையறிந்துகொண்ட நீலகண்ட பிரம்மச்சாரி தெற்கே பல தடவைகள் விஜயம் செய்து தமது புரட்சி நண்பர்கள் ஊக்கம் தளராதபடி பார்த்துக் கொண்டு வந்தார்.

# 10

# ஆஷ் கொலை முதல் முயற்சி

ஆனால், சென்னை ராஜதானியில் அப்போது அரசாங்கத்தின் அடக்கு முறை தலைவிரித்தாடியது. வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்ரமணியசிவம் முதலிய தேசபக்தர்களைச் சிறையில் தள்ளக் காரணமாக இருந்த ஆஷ்துரை பதவி உயர்வு பெற்று திருநெல்வேலி மாவட்டக் கலெக்டராகியிருந்தான். சர்க்காரிடம் தனக்கிருந்த செல்வாக்கை உபயோகித்து, சிறையிலிருந்த தலைவர்களது மன உறுதியைக் குலைக்கப் பல துன்புறுத்தல் நடவடிக்கைகளை அவன் மேற்கொள்ளச் செய்தான் என்று தேசபக்தர்களிடையே பரவலாக நம்பப்பட்டு வந்தது.

### சிறையில் கொடுமை

அக்காலத்தில் சிறைகளில் அரசியல் கைதிகள் என்ற தனிப் பாகுபாடோ, சலுகையான வசதிகளோ கிடையாது. சிதம்பரம் பிள்ளையும், சுப்ரமணிய சிவமும் 'கடுங் காவல்' தண்டனை பெற்ற கைதிகள் (சிதம்பரம் பிள்ளையின் நாடு கடத்தல் தண்டனைப்படி அவர் அந்தமானுக்கு அனுப்பப்பட்டிருக்க வேண்டும்; ஆனால், அந்தமானுக்கு யாரையும் அனுப்பவேண்டாம் என்று மத்திய சர்க்கார் 1906-இல் உத்தரவிட்டிருந்தது; இட நெருக்கடி காரணமாயிருக்கலாம். ஆகவே சிதம்பரம் பிள்ளை 'கடுங்காவல்' கைதிபோல கோவைச் சிறையில் வைக்கப்பட்டிருந்தார்.) கடுங்காவல் தண்டனைக்கு உடலுழைப்பு வேலை உண்டு. ஆகையால், சிதம்பரம் பிள்ளையைக் கல்லுடைக்கச் செய்தும் கக்கூஸ் சுத்தம் செய்யச் சொல்லியும் துன்புறுத்தப்பட்டார். சிவம் சுண்ணும்புக் காரம் நிறைந்ததான ஆட்டு ரோமம் வழித்தும்

சுண்ணும்பில் ஊறப்போட்ட ரோமத்தைச் சுத்தம் செய்தும் அவதிப்படும்படி செய்தனர். ஏற்கனவே நோய் 'கண்ட வரான சிவம் நோய் மிகுந்து கஷ்டப்பட்டார். தம்மை தொழுநோய் வார்டில் சேர்த்து சிகிச்சை தருமாறு அவர் விடுத்தவேண்டுகோள் நிராகரிக்கப்பட்டது

இதெல்லாம் போக, சிதம்பரம் பிள்ளை சிறையிலிருந்த எண்ணெய்ச் செக்கை மாடு போல இழுக்கச் செய்தனர் என்றும் சிறையிலிருந்து வந்த செய்திகள் கூறின. இது ஊர் ஜிதம் செய்யப்படவில்லை யென்ருலும், சிதம்பரம் பிள்ளை செக்கிழுத்து நலிந்தார் என்றே வெளியே உள்ளவர்கள் உறுதியாக நம்பினுர்கள். பெரு மதிப்புக்குரிய ஓர் அரசியல் தலைவர் இவ்வாறு மிருகம் போல நடத்தப் பட்டதற்கும் ஆஷ் துரைதான் தூண்டு கோல் எனற நம்பிக்கையும் பர வலாக இருந்தது ஆஷ் துரை ஏற்கனவே 1908-இல் திருநெல்வேலிக் கலவரத்தின் போது முரட்டுத்தனமாக, முன் எச்சரிக்கையின்றிச் சுட்டான் என்பதும், கோவிலுக் குச் சென்று திரும்பி வருகையில் கீழே விழுந்த தேங்காயை எடுக்கக் குனிந்த ஓர் அப்பாவிச் சிறுவன் கல்லெறியப் போகிருனெனக் கருதப்பட்டு ஆஷினுல் சுட்டுக் கொல்லப் பட்டான் என்பதும், மற்றும் மூவரையும் அவனது குண்டு கள் பலி கொண்டன என்பதும் ஆஷின்மேல் இருந்த ஆத்தி ரத்தை வளர்க்க உதவின.

### "இந்த ஆஷின் அக்கிரமத்துக்கு முடிவில்லையா!"

1909-ஆம் ஆண்டு மத்தியில், வ. உ. சி. யின் குடும்ப நண்பர் பரலி சு. நெல்லையப்பன் புதுவையிலிருந்து கோவைச் சிறைச் சாலைக்குச் சென்று வ. உ. சி. யை பேட்டி கண்டு வந்தார். புதுவை திரும்பிய அவர், சிறையில் சிதம் பரம் பிள்ளை படும் துயர்களை விவரித்து, வ. உ. சி. தம் மிடம், "இத்த ஆஷி அக்கிரமத்துக்கு முடிவில்லையா!" என ஆதங்கப்பட்டதாக நெல்லையப்பன் தமது புதுவை நண்பர் களிடம் தெரிவித்தார். அப்போது புதுவையில் தலை மறை வாக இருத்த வ. உ. சி நண்பர் மாடசாமி இதைக் கேட்டு மனம் புழுங்கினுர்.

இதற்குப் பின், ராஜபாளையம் சுப்பையா முதலியார் என்ற ஒருவர் புதுவை வந்து மாடசாமிப் பிள்ளையைச் சந் தித்தார் கோவைச் சிறையிலிருந்து வ. உ. சி. சொல்லி யனுப்பியபடி தாம் மாடசாமியைச் சந்திப்பதாகவும், ஆஷ் துரையை ஒழித்துக்கட்டுவதற்கு ஆயிரம் ரூபாய் தருவதா கவும் சுப்பையா முதலியார் மாடசாமியிடம் தெரிவித்தார்

வ. உ. சி. அவ்வாறு சொன்ருரா அல்லது அவர் நெல்லையப்பரிடமும் பிறரிடமும் ஆதங்கப் பட்டதை வெளியிலுள்ள அவரது நண்பர்கள் இவ்வாறு சொல்லிவிட் டார்களோ என்று சரிவர அறிய இன்று வழியில்லை. ஆனுல், சுப்பையா முதலியார் புதுவையில் மாடசாமியைத் தவிர நீலகண்ட பிரம்மச்சாரியையும் சந்தித்தார். தம்மிடமும் சுப்பையா முதலியார் இவ்வாறே தெரிவித்ததாக நீலகண்ட பிரம்மச்சாரி (தற்போது 86 வயதினரான ஸ்ரீ ஸத்குரு ஓம் கார்-வியக்கத் தக்க ஞாபக சக்தி இன்றளவும் கொண்டவர்) கூறுகிருர்.

### மாடசாமியின் முயற்சிகள்

மாடசாமிப் பிள்ளை, சுப்பையா முதலியார் சொன்ன வைகளைக் கேட்டு மனம் நொந்தார். அவருக்கு வ. உ. சிதம்பரம் பிள்ளையிடம் அளவற்ற பக்தி. பல்லாண்டுகளுக்கு முன் மாடசாமி ஏழையாக ஒரு வழக்கில் சங்கடப் பட்டுக் கொண்டிருந்த சமயம் வ உ. சி. அவ் வழக்கில் தமது தந் தையாருக்கு எதிராக வாதிட்டு மாடசாமிக்கு உதவிபுரிந் ததை அவர் நன்றியுடன் நினைவு கொண்டவர். அதுமுதலே வ உ. சி. யின் அரசியல் நடவடிக்கைகளிலும் சுதேசிக் கப்பல் அலுவல்களிலும் அவரது உற்ற கையாளாக விளங்கி வந்தார் ஒரு சமயம் சுதேசிக் கப்பலை வெடி வைத்துத் தகர்க்க விரோதிகள் முயன்றபோது மாடசாமியே உயி ருக்குத் துணிந்து வெடியை அகற்றினுராம். திருநெல்வேலிக் கலவரத்துக்குப் பின் மாடசாமிப் பிள்ளை தலை மறைவாகி விட்டார். கலவர வழக்கில் அவரும் ஒரு குற்றவாளியாக்கப் பட்டிருந்தார். அதனுல் அவர் புதுவையில் இருந்து மட்டு மின்றி, அங்கு கூடத் தலை மறைவாகவும் இருந்தார். சிதம் பரம் பிள்ளையின் சிறைச் சாலைத் துயர்களுக்குக் காரண மெனக் கருதப்பட்ட ஆஷை ஒழித்துக் கட்ட மாடசாமி உடனே முயற்சி மேற் கொண்டார். [தொடரும்)